# சேசுநாதருடைய திரு இருதயத்தூதன்

தொகுதி 68, பகுதி 10

October 1955

Record no. 2689

*Cēcunātaruṭaiya tiru irutayattūtaṉ*
*Tokuti 68, pakuti 10*
*October 1955*

Record no. 2689

ஒவ்வொரு குடும்ப

ஜெபமாலையும்

விசுவாசப்
பரம்புதல்
மந்திரமாலை

★

# விசுவாசப்பரம்புதல் ஞாயிறு

23-10-1955.

NATIONAL DIRECTOR: REV. FR. SAMA. S.J. P.B. 69. ST. MARY'S MADURAI.












பர் சேசுநாதருடைய 195

# திரு இருதயத்தூதன்

## சந்தா விபரம்

| பிரசுரங்கள் | வருட சந்தா தபால்செலவு உட்பட — இந்தியா ரூ. | அ. | மலாயா, பர்மா முதலிய அயல் நாடுகளுக்கு ரூ. | அ. |
|---|---|---|---|---|
| 1. திரு இருதயத்தூதன் மட்டும் | 2 | 0 | 2 | 10 |
| 2. தூதனும் + கத்தோலிக்கு சத்தியாபிமான சபை வெளியீடும் | 3 | 8 | 4 | 6 |
| 3. கத்தோலிக்கு சத்தியாபிமான சபை வெளியீடு மட்டும் (தூதன் சந்தாதார் அல்லாதவர்களுக்கு) | 2 | 8 | 3 | 0 |
| 4. தேவரகசிய சீட்டுகள் (30 கொண்ட செட் ஒன்றுக்கு) | 1 | 0 | 1 | 8 |

**இலங்கை சந்தாதார் இனிமேல் இலங்கையிலேயே தங்கள் சந்தாவைக் கட்டிவிடலாம்.**

திரு இருதயத் தூதன் ... ரூ. 2, சதம் 50

தூதனும், சத்தியாபிமான சபைவெளியீடும் ரூ. 4—0—0

**இலங்கையில் சந்தா அனுப்பவேண்டிய விலாசம்:**

Rev. Fr. R. Chiriatti s.j.,
St. Aloysius' College, GALLE.

**குறித்த ஒருமாத இதழில் பிரசுரிக்கவேண்டியவை முந்தின மாதம் 10-ம் தேதிக்குள் ஆபீஸுக்கு வந்து சேரவேண்டும்.**

தொகுதி 68 பகுதி 10





# சேசுநாதருடைய திரு இருதயத்தூதன்

உம்முடைய
இராச்சியம்
வருக!

*அக்டோபர் 1955*

### பொருளடக்கம்



செயின்ட் மேரீஸ்,
P.B. 56, மதுரை
1955

# அக்டோபர் மாதம்

**பொதுக்கருத்து :—** இரும்புத் திரைக்குப் பின் உள்ள "மௌன திருச்சபை"யின் குருக்கள் மேற்றிராணிமார்களுக்காக

**மிஷன் கருத்து :—** ஆள், பொருள், குறைவினுல் முக்கியமாக ஆப்பிரிக்காவில் அப்போஸ்தல முயற்சி தடையுருமல் இருக்க

| இங். தேதி | நாள் | தமிழ் தேதி | திருநாட்கள் |
|---|---|---|---|
| 1 | ச | ○ 15 (புரட்டாசி-மீ) | ** **மு. சனி** அர்ச். ரெமிஜியார், மே., ஸ்து. |
| 2 | **ஞா** | 16 | ✠ **இஸ். திரு. பின் 18-ம் ஞா. அர்ச். காவல் சம்மன** |
| 3 | தி | 17 | அர்ச். குழந்தை தெரசம்மாள், க. [**சுக்களின் திரு.** |
| 4 | செ | 18 | அர்ச். ஐந்துகாய பிரான்சீஸ்கு, ஸ்து. |
| 5 | பு | 19 | ** அர்ச். கு. தெ. திரு. பின் 3-ம் நாள். (அர்ச். பிளாசி |
| 6 | வி | 20 | அர்ச். புரூனே ஸ்து. [துஸ். துணை. சே. ச. சி. |
| 7 | வெ | 21 | **தலை வெள்ளி அர்ச். ஜெபமாலை மாதா திருநாள்** |
| 8 | ச | 22 | அர்ச். விரிசித்தம்மாள், வி. |
| 9 | **ஞா** | 23 | ✠ **இஸ். திரு. பின். 19-ம் ஞா.** அர்ச். லெயோனூர்டு |
| 10 | தி | 24 (மன்மத-ஞு) | அர்ச். பிரான்சிஸ்கு போர்ஜியார், சே. ச. [அரு. ஸ்து |
| 11 | செ | 25 | மரியாயி மாதாவான திருநாள் |
| 12 | பு | 26 | ** உவில்பிரிதப்பர், மே. முந்தின ஞாயிறு பூசை |
| 13 | வி | 27 | ** அர்ச். எட்வர்டு இராஜா, ஸ்து. |
| 14 | வெ | 28 | அர்ச். கல்லிஸ்தர், பா. மே. |
| 15 | ச | ● 29 | அர்ச். அவிலா தெரசம்மாள், க. |
| 16 | **ஞா** | 30 | †✠ **இஸ். திரு. பின். 20-ம் ஞாயிறு** அர்ச். எட்வீஜம் |
| 17 | தி | 31 | அர்ச். மார்கரீத் மரியம்மாள், க. [மாள், வி. |
| 18 | செ | 1 (ஐப்பசி-மீ) | அர்ச். லூக்காஸ், சுவி. |
| 19 | பு | 2 | அர்ச். அல்காந்திரா இராயப்பர், ஸ்து. |
| 20 | வி | 3 | அர்ச். கான்சியுஸ் அருளப்பர், ஸ்து. |
| 21 | வெ | 4 | ** அர்ச். ஹிலாரியார், மடாதிபதி |
| 22 | ச | 5 | ** அர்ச். கொர்துலம்மாள். மாதாவின் பூசை |
| 23 | **ஞா** | 6 | ✠ **மிஷன் ஞாயிறு. இஸ். திரு. பின். 21-ம் ஞா.** |
| 24 | தி | 7 | அதிதூதரான அர்ச். ரபேல் சம்மனசு திருநாள். |
| 25 | செ | 8 | ** அர்ச். கிரிசாந்தப்பரும் தாரியம்மாளும், வே. |
| 26 | பு | 9 | ** அர்ச். எவரிஸ்தப்பர், பா., வே. |
| 27 | வி | 10 | அர்ச். சீமோனும், ததேயுமுடைய திரு. முந்தின நாள் |
| 28 | வெ | 11 | **அர்ச். சீமோன், ததேயுஸ் அப்.** |
| 29 | ச | 12 | ** அர்ச். நர்சீசியார், மே. வே. மாதாவின் பூசை. |
| 30 | **ஞா** | 13 | ††✠ **கிறீஸ்து இராஜா திரு. இஸ். திரு. பின் 22-ம்** [**ஞாயிறு** |
| 31 | தி | ○ 14 | சகல அர்ச். திரு. முந்தினநாள் (அல்போன்ஸ் ரோட்ரிகுவஸ், சே. ச.) |

Imprimatur: ✠ J. PETRUS SJ *Archiep. Maduraiensis.*






## "மௌன திருச்சபை"யின் குருக்கள் மேற்றிராணிமார்கள்

### நாஸ்திக பொதுவுடைமை இயக்கம்

வணக்கத்துக்குரிய பாப்பரசர் 11-ம் பத்திநாதர் நாஸ்திகப் பொதுவுடைமைபற்றி எழுதித் தந்த நிருபத்தில், "இப்போது ஓர் பெரும் புரட்சி உற்பத்தியாகி, உலக முழுவதும் பரவி நாசம் செய்யத் தலைப்பட்டிருக்கிறது. இப்புரட்சியானது இதற்கு முன் திருச்சபைக்கு விரோதமாய் எழும்பிய பல்வேறு வேத கலாபனைகளைவிட அதிகக் கொடூரத்தோடு உலகத்தின் பல நாடுகளைத் தாக்கி அழிக்க முயன்று வருகிறது," என்று அழுத்தந்திருத்தமாக எச்சரித்திருக்கின்றூர். இன்றைய திருச்சபை மேற்சொன்ன கொடிய விபத்திற்கு இலக்காகிவிட்டது என்றுல் மிகையாகாது. ஏனெனில் தாறுமாறுன சீர்கேடுகள் பொதுவுடைமை இயக்கத்திற்கு அடிமைப்பட்டிருக்கும் நாடுகளில் பயங்கரமான விதமாய் தாண்டவமாடுவதுடன் உலகத்தின் மற்ற பாகங்களையும் பாதித்து வருகின்றது.

பொதுவுடைமை இயக்கத்தின் கொள்கைகள் இயற்கையிலே வேதத்திற்கு விரோதமாயிருக்கின்றன. வேதம், மக்களுக்கு அபினைப் போன்ற மயக்க மருந்து ; கடவுள் வாடையே சமூகத்திற்கு உதவாது என்ற தப்பறைகளை அடிப்படையாகக் கொண்டு சமூகக் கட்டுப்பாடுகளை தகர்த்தெறிந்து, நல்லொழுக்க முறைகளை நகைத்து இகழ்ந்து, புண்ணியத்தை பாவமென்றும் பாவத்தைப் புண்ணியமென்றும் புரட்டிப் போதித்து, கிறீஸ்துவ நாகரீகத்தைச் சீரழித்து மக்களின் இருதயத்திலிருந்து கடவுள் விசுவாசத்தை வேருடன் களைந்தெறிய கங்கணங்கட்டித்திரிவர் நாஸ்திக பொதுவுடைமை வாதிகள். இவர்கள் தமது ஆதிக்கத்துக்குள்ளான நாடுகளில் 'தமது சொந்த ஆட்சி முறையை ஏற்படுத்தி கத்தோலிக்கு திருச்சபையை எண்ணற்றவகையில் இம்சித்து வருகின்றனர்.

### "மௌன திருச்சபை"

பொதுவுடைமை ஆட்சிமுறைக்குட்பட்டு சகல துன்ப வருத்தங்களுக்கும் ஆளாகி தாம் அனுபவிக்கும் உபாதைகளை பிறநாட்டினர்

அறியும்படி வாய்விட்டுச் சொல்லி ஆறுதல் பெறுவதற்கான சுதந்
தரத்தை முதலாய் இழந்து தவிக்கும் கத்தோலிக்கு மக்களையே
மௌன திருச்சபை யென்று அழைக்கின்றோம். தற்போது உலகத்தில்
மூன்றிலொரு பாகம் பொதுவுடைமை ஆதிக்கத்திற்குட்பட்டிருக்
கிறது. இங்கே உள்ள கத்தோலிக்கரின் தொகை 6000,000,000.
இவர்களிடையே மதவிரோதமான பிரச்சாரம் தீவிரமாக நடந்துவரு
கிறது ; ஆனால் மதத்தை போதித்துப் பரப்புவதற்கான எவ்வித முயற்
சிக்கும் கடும் தடை உத்தரவு. இளைஞர்களுக்கு கல்விப் பயிற்சி
அளிக்க திருச்சபைக்கு எவ்வித சுதந்தரமும் கிடையாது. பொதுநல
அலுவல்களில் கத்தோலிக்கருக்குச் சலுகை என்பது சற்றுமில்லை.
சர்க்கார் பள்ளிக்கூடங்களே எங்கும் அனுமதிக்கப்பட்டுள்ளன.
இங்கே இளைஞர்களுக்கு அளிக்கப்படும் கல்வி முற்றிலும் உலோகாயத
மான நாஸ்திகத்தில் ஊறியிருக்கின்றது. சாதாரணமாக கோவில்களில்
முதலாய் சிறுவர் சிறுமிகளுக்கும் வாலிபர்களுக்கும் ஞான உபதேசம்
கற்பிக்க முடியாது. அச்சுப் பிரசுரம், சினிமா, ரேடியோ, ஆராய்ச்சி
சாலை போன்ற கல்வி பிரச்சார சாதனங்கள் யாவும் நாஸ்திக பொதுவு
டைமையரின் அதிகாரத்திற்கு இணங்கியே இயங்குகின்றன.

இவ்விதமாய் நம் தாயான திருச்சபை பயிரங்க சீவியத்திலிருந்து
விலக்கப்பட்டு கோவில் குருமடத்திற்குள் அடைபட்டு துடிக்கின்றாள்.
சகல சுதந்தரங்களும் நிராகரிக்கப்பட்டு தன் குழந்தைகள் வலுவந்த
மாய் தன் மடியிலிருந்து பறிக்கப்பட்டு, ஞானமிர்தத்திற்குப் பதிலாக
நாஸ்திக நச்சுக் கொள்கைகள் ஊட்டப்பெற்று ஆன்ம உயிர் இழப்பது
கண்டு பதைபதைக்கின்றாள். தனது வயோதிபத்தில் தன்னைச் சுற்றி
புத்திர பௌத்திரர் துள்ளி விளையாடுவது கண்டு ஆறுதல் அடைவதற்
குப் பதிலாக தனது ஆருயிர் குழந்தைகள் நஞ்சுண்டு மாய்ந்துபோக,
தன் வம்சமே அழிந்துபடுவதை உன்னி சிறைச்சாலை கம்பிகளை எண்
ணியவாறு மௌனமாய் கண்ணீர் உகுப்பதன்றி வேறு என்ன செய்
வாள் அந்த நல்ல தாய் !

## குருக்கள் மேற்றிராணிமார்கள்

திருச்சபைக்கு எதிராக இரும்புத்திரைக்குப் பின்னால் நடை
பெறும் அட்டூழியங்கள்பற்றி நமக்கு போதிய சான்றுகள் கிடைத்
திருக்கின்றன. அவைகளை நினைக்கும்போதே அங்கம் நடுங்குகின்
றது. குற்றம் செய்யாதவர்களையும் தாங்கள் குற்றம் செய்ததாக
ஒப்புக்கொள்ளும்படி செய்ய எத்தகைய கொடிய இம்சைகள் ! எப்
பேர்ப்பட்ட அநாகரிக மிலேச்சத்தனம் ! நூதன நூதனமான நிர்ப்பந்
தங்கள் எத்தனை ! நவீன ஆராய்ச்சி சாதனங்கள் இத்தகைய நிஷ்டூர
நடபடிக்கைகளுக்குத்தானா பயன்படவேண்டும்? மக்கள் இடைவிடாது
சர்வாதிகார சர்க்காரின் பயப்பிராந்தியிலேயே வாழவேண்டியிருக்



கிறது. உயிருக்கும் சாவிற்கும் தாமே கர்த்தர் என்ற ஆணவத்தோடு
நாஸ்திகவாதிகள் சர்வ சுதந்தரத்தையும் மக்களிடமிருந்து பரித்துக்
கொண்டனர். இந்நிலையில் வாய்விட்டுச் சொல்ல இயலாத இக்கஷ்ட
நிஷ்டூரங்களை, திருச்சபையோ தன்மானமுள்ள மக்களோ எப்படி
சகித்துக்கொண்டிருக்கக்கூடும் ?

இதற்கு மேலாக குருக்கள் மேற்றிராணிமார்களைப் பொருத்த
மட்டில் இந்நயவஞ்சக நாஸ்திகர், "மேய்ப்பனை அடிப்பேன், மந்தை
யின் ஆடுகள் சிதறுண்டு போகும்," என்ற வாக்கை முற்றுமுணர்ந்து
காரியத்தில் ஈடுபட்டுள்ளார். இதுவரை நிர்தாட்சணியமாக ஒழித்துக்
கட்டிய மேய்ப்பர்களின் தொகை சொற்பமல்ல. மௌன திருச்சபை
யில் இற்றைக்கு 260 மேற்றிராசனப் பிரிவுகள் இருக்கின்றன.
1954-ம் வருடப் புள்ளிவிவரத்தின்படி அங்குள்ள 185 பிரதான
ஆசாரியர் கொல்லப்பட்டோ, சிறையில் அடைபட்டோ, பாசறைகளில்
புதைக்கப்பட்டோ, தேசப்பிரஷ்டம் செய்யப்பட்டோ தம் மந்தைகளி
லிருந்து கடத்தப்பட்டிருக்கின்றனர். இவர்கள் தம் மந்தைகளுக்காக
செபிப்பதையும் வாதைகள் அனுபவிப்பதையும் தவிர வேறு என்ன
செய்யக்கூடும்? அனேக இடங்களில் நாஸ்தீக சர்க்கார் போலி குருப்
பிரசாதிகளை வைத்துக்கொண்டு காரியம் நடத்தி மேற்றிராசனங்களை
நாசஞ் செய்வதும் அபூர்வமல்ல.

மற்றும் குருக்களும் மேற்றிராணிமார்களும் இடைவிடாது ஒற்
றர் பின் தொடர, தமது கடமைகளை முதலாய் செவ்வையாக செய்ய
முடியாதவாறு காவந்துகளுக்கு இலக்காகி துன்பப்படுகின்றனர். பாப்
பரசருடன் தொடர்பு கொள்ளச் சுதந்தரம் கிடையாது. சுவி
சேஷத்தை போதிப்பதிலும் எண்ணற்ற இடஞ்சல்கள். மேலும் தங்
கள் குருமடங்கள் கலைக்கப்படுவது கண்டு கலங்குகின்றனர். இன்
னும் இருக்கும் குருமடங்களையும் சர்க்கார் கைப்பற்றி தம் கொள்கை
களைப் புகுத்த முன் வந்து விடுகின்றது. எனவே உண்மையான தேவ
அழைத்தல் குறைந்து விடுகின்றது. நாளுக்கு நாள் பொதுவுடைமை
ஆதிக்கத்திலுள்ள நாடுகளில் குருக்களின் தொகை குன்றி வருகின்றது.
குருத்துவ சந்நியாச கோத்திரமே, பொய் புரட்டு நிந்தை அவமானங்
களுக்கு இலக்காகி துன்பத்தில் வாடுகின்றது.

## நமது கடமை

இவ்விதமாக இடறல் படும் மௌன திருச்சபைமாட்டு நமக்குள்ள
கடமைதான் என்ன? சுதந்தர நாடுகளிலுள்ள நாம் இவ்விதமாய்
வாதைக்கு உள்ளாகியிருக்கும் சகோதரரோடு நமக்குள்ள சுபாவத்
திற்கு மேற்பட்ட ஐக்கியத்தை முற்றும் ஊகித்தறிய வேண்டும். இந்த
அறிவிலிருந்து கிறிஸ்துவின் ஞான சரீரத்தின் அங்கங்களாகிய வாதைப்
படும் இந்த சகோதரரோடு நமக்குள்ள ஒருமைப்பாடும், பொறுப்
புணர்ச்சியும் தோன்ற ஏதுவாகும்.

ஆனுல் இந்த நல்லுணர்ச்சியோடு நின்றுவிடலாகாது. நடை
முறையில் நாம் செய்ய வேண்டியது என்ன ? தேவ விசுவாசத்திற்காக
இத்தனை துன்ப துரிதங்களுக்கு ஆளாகி கை கால்களில் விலங்கு
களோடு சிறையில் வாடும் இந்த சகோதரர்களிடம் சென்று சந்தித்து
அவர்களுக்கு ஆறுதல் தருவது கூடாது தான். ஆனுல் நமது ஜெப
தப முயற்சிகளால் தேவனிடம் மன்ருடி அவருடைய வரப்பிரசாதங்
களாகிய தூதர்களை அனுப்பி அவர்களுக்கு தைரியமூட்ட நம்மால்
கூடும். தற்போது நடந்துவரும் இந்த விபரீத வேத கலாபனையின்
கஞகனத்தை உணர்ந்த ஒவ்வொரு கத்தோலிக்கனுடைய தவிர்க்க முடி
யாத கடமை இது. விலங்கிடப்பட்டு வருந்தும் நமது தாயாம் திருச்
சபைக்கு ஆறுதலளிக்க அவளுடைய பிரமாணிக்கமுள்ள புத்திரர்
அன்றியே வேறு யார் முன் வருவர்.

எனவே குருப்பிரசாதிகளும் கன்னியர் சந்நியாசிகளும் தமது
மந்தைகளிலிருந்து பிரிக்கப்பட்டு அல்லது மடங்களிலிருந்து வெருட்
டப்பட்டு வருந்தும் மௌன சபைக்காக இம்மாதம் தங்கள் செபதபங்
களையும் நற்கிருத்தியங்களையும் ஒப்புக்கொடுப்பார்களாக. மாசற்ற
சிறு குழந்தைகள், கிறீஸ்துவ கல்வி மறுதலிக்கப்பட்டு நாஸ்தீக நச்சுக்
கொள்கைகளை பருக வற்புறுத்தப்படும் மௌன சபை சிசுக்களுக்காக
தம் பலமெல்லாம் கூட்டி மன்ருடுவார்களாக. நமது வாலிபர்கள்
இரும்புத் திரைக்குப் பின் தேவ திரவிய அனுமானத்தின் உதவியும்
கடவுள் உணர்ச்சியும் இன்றி மிலேச்சத்தனமாய் உடலை வளர்க்கும் நிர்ப்
பந்தத்திற்கு ஆளாகியிருக்கின்ற வாலிப மக்களுக்காக தமது இதய
ஆவலை ஆண்டவரை நோக்கி எழுப்புவார்களாக. தாய் தந்தையர்,
பிள்ளைகள் தம்மிடமிருந்து பிரிக்கப்பட்டு அபத்தக் கொள்கையாம்
ஆழ் கடலில் நீந்த பழகி தமது ஆன்ம உயிரை மாய்த்துக்கொள்வது
கண்டு துயருறும் மௌன திருச்சபையின் பெற்ருேருக்கு ஆறுதல் வரு
விக்க முயல்வார்களாக. விருத்தாப்பியரும் வியாதிக்காரரும் தேவ
திரவிய அனுமானங்களின் ஆதரவும் குருப்பிரசாதிகளின் உதவியு
மின்றி மறு உலகிற்கு பயணத்தை துவக்க அங்கலாயிக்கும் மௌன
திருச்சபையின் முதியோர் நோயாளிகளுக்காக வேண்டிக்கொள்வார்
களாக. நாம் எல்லோரும் மௌன திருச்சபையின் மேய்ப்பர்களும்
விசுவாசிகளும் தமது விசுவாசத்தை மறுதலிப்பதைக் காட்டிலும் சகல
துன்பங்களையும் ஏற்று, வேண்டுமானுல் தமது இரத்தத்தையும் முதலாய்
சிந்தி வீரத் தியாகத்தோடு விசுவாசத்தை நிலைநாட்டவும் இவர்களு
டைய இரத்தமே வருங்கால திருச்சபையின் வித்தாக விழுந்து தழைத்
தோங்கவும் அருள் புரிய ஆண்டவரை மன்ருடுவோமாக.

---




## ஆள், பொருள், குறைவிஞல் முக்கியமாக ஆப்பிரிக்காவில் அப்போஸ்தல முயற்சி தடையுருமல் இருத்தல்

(S. தாவீது. சே. ச.)

சேசுநாதர் சுவாமி இவ்வுலகின் அரசர். உலகமெத்திசையிலும் அவர் அரசாட்சியை பரவச்செய்ய வேண்டுமென்பதே அவர் ஆவலும் விருப்பமும். அவர் மனித அவதாரம் எடுத்ததின் நோக்கமும் இது ஒன்றே. ஞானஸ்நானம் பெற்ற ஒவ்வொரு கிறீஸ்துவனும், இந்த அன்பின் அரசரின் பிரஜைகளாவர். ஆகையால் அவர் அரசு இவ்வுலகில் விர்த்தியடையச் செய்வது நமது பெருங்கடமையாகும். ஆனுல் இது அவ்வளவு எளிதான காரியமன்று. தற்போது இவ்வுலகின் பல திசைகளிலிருந்தும் அவர் அரசாட்சிக் கெதிராக எதிரிகளின் கோலாகலங்கள் பொங்கிக் கொதிக்கின்றன. திருச்சபையை வேத விரோதிகள் வன்மையுடன் தாக்குகின்றனர். இவ்வக்கிரமத்தை தடுத்து நிறுத்த, சீருடன் அமைந்த ஓர் சேனை அவசியமாக இருக்கின்றது. எதிரிகளின் கொட்டத்தை அடக்குவதுடன், அவர்களையும் மனம் திருப்பி சேசுபதம் இழுக்கவும் வல்ல சேனை ஒன்று அவசியம்.

இக்காலத்தில் சத்திய திருச்சபையானது, உலகின் பல பாகங்களிலும் பெரும் இடைஞ்சல் இக்கட்டுகளுக்கு உள்ளாகியிருக்கிறதென்பதை நாம் கேள்விப்பட்டிருக்கிருேம். ஆனுல் ஒரு சில இடங்கள் வேதவிரோதிகளின் பயங்கரமான தாக்குதலால் அலைக்கழிக்கப்பட்டு வருகின்றன. இவ்வித பரிதாபகரமான நிலைகளில் உழலும் நாடுகளில் ஒன்று ஆப்பிரிக்கா நாடு.

ஆப்பிரிக்கா நாட்டில், சேசுநாதரின் அரசாட்சியின் பரவுதலுக்கு முட்டுக்கட்டை போடும் காரணங்கள் முக்கியமாக இரண்டு ஆகும். ஆப்பிரிக்கா நாட்டை அறுவடைக்குப் பக்குவமாக இருக்கும் ஓர் விளை நிலத்திற்கு ஒப்பிடலாம். ஆனுல் பரிதாபம்!

அறுவடை செய்ய போதுமான வேலையாட்களும் மற்றும் உபகரணங்களும் இல்லாதபடியால் அனேக விலையுயர்ந்த ஆத்துமங்கள் நஷ்டப்படுகின்றன. ஞானஸ்நானம் பெற்று சர்வேசுரனின் பிள்ளைகளாக வேண்டுமென்ற ஆவலால், கூட்டம் கூட்டமாக விரைந்துவரும் ஆத்துமங்களுக்கு உபதேசித்து திருச்சபையில் சேர்த்துக்கொள்ள போதிய குருக்களும் பொருளுதவியும் இல்லை என்பது மிகவும் வருந்தத்தக்கதாகும். உண்மையான ஆயனை நோக்கி விரைந்து வரும் ஆடுகளை அணைத்துப் பராமரிக்க உதவியாட்கள் இல்லை.

இந்த இக்கட்டுகள் மத்தியிலும் சத்திய வேதத்திற்கு இன்னுமொரு பெரும் ஆபத்து வளர்ந்து வருகிறது. அதாவது காட்டுத் தீ போல், பரவிப்படர்ந்து, மக்கள் மனதைக் கலக்கும் முகமதியக் கொள்கைகளாகும். அஞ்ஞான அந்தகாரத்தில் உழலும் ஆப்பிரிக்கா நாட்டு மக்களிடையே இக்கொள்கைகள் வெகு எளிதில் வேரூன்றி வருகின்றன. ஆனால் மதவைராக்கியம் படைத்த முகம்மதியரின் பிரசாரத்துக்கும் மேலாக முயன்று ஆத்துமங்களை நித்தியப்பிரகாசத்திற்கு இழுக்க, அருள் பலத்தோடு ஆள் பலமும் பொருள் பலமும் வேண்டியிருக்கிறது.

ஆப்பிரிக்காவில் திருச்சபையைப் பரவச் செய்ய இது ஓர் அரிய சந்தர்ப்பமாகும். எவ்வித பயங்கரமான புயல் காற்று மத்தியிலும் நம் சத்திய வேதச் சுடரைப் பிரகாசிக்கச் செய்வது நம் கடமை. மேலும் அங்கு சேசுநாதரின் அரசை எதிர்த்துப் போராடும் சத்துருக்களை எளிதில் வெல்ல நம் ஜெபதபங்களும் அவசியம். நமது ஜெபங்கள் திருச்சபையைத் தழைத்தோங்க செய்யும் என்பது திண்ணம். ஆதலால் எவ்வித இன்னல்களையும் வென்று ஆப்பிரிக்கா நாட்டில் கிறீஸ்துவின் அரசாட்சி பரவிப்படர, இறைவனை நோக்கி இந்த மாதம் உருக்கமாக வேண்டிக்கொள்ளோம்.

## ஒப்புக்கொடுக்கும் ஜெபம்

சேசுவே, உமது இருதயத்தின் கருத்துக்களுக்காக, இன்று என் ஜெபங்களையும், வேலைகளையும், இன்ப துன்பங்களையும் மரியாயின் மாசற்ற இருதயத்தின் வழியாக உமக்கு ஒப்புக்கொடுக்கிறேன். என் பாவங்களுக்குப் பரிகாரமாகவும், சபையாரின் கருத்துக்களுக்காகவும், விசேஷமாக இரும்புத் திரைக்குப் பின் உள்ள "மௌன திருச்சபை"யின் குருக்கள் மேற்றிராணிமார்களுக்காகவும், ஆள், பொருள் குறைவால் ஆப்பிரிக்காவில் அப்போஸ்தல முயற்சி தடையுறாமல் இருக்கவும் உலகமெங்கும் நிறைவேற்றப்படும் திவ்விய பலிபூசையோடு ஒன்றித்து உமக்கு ஒப்புக்கொடுக்கிறேன்.

---

# அன்னை ஜெபமாலை மாதா

ச. ஸ்தனிஸ்லாஸ்

பதின்மூன்றும் நூற்றாண்டின் முற்பகுதியில் பிரான்ஸ் தேசத்தில் அல்பிஜென்சியர் என்ற பதிதர் தோன்றி நாடு நகரங்களிலும் பட்டி தொட்டிகளிலும் சென்று திருமறைக் கொள்கைகளுக்கெதிராக போதித்து வந்தார்கள். இந்த பைசாசக் கொள்கைகளிலிருந்து மக்களைவிடுவித்து ஆன்ம, அற அன்பு வழிகளிலே நல்லாற்றுப் படுத்தும் ஒரு கலங்கரை விளக்காக புனித சாமிநாதர் தோன்றினார். அவர் கண் கண்ட தூரமளவும் கால் கடுக்க நடந்து சென்று, திருமறைப் போதகத்தை மக்களுக்கு எடுத்துக்கூறி, பதிதரின் அபத்தப் பிரச்சாரங்களை அம்பலப்படுத்தினார். ஆனால்...ஐயகோ! மக்கள் மனம் மாறவில்லை. மக்கள் மனம் மாறாதது கண்டு மகாத்மா மனம் தளரவில்லை. தான் ஆற்றிய வீரப் பணிக்கு வெற்றி கிட்டவில்லையே என்று அவர் விரக்தி கொள்ளவில்லை. மனதை அலட்டிக்கொள்ளவுமில்லை. அதற்கு மாறாக தேவ திருவுளத்தின் உதவியை அவர் நாடினார். பாவிகளுக்கு அடைக்கலம், பரிதவிப்போரின் தேற்றரவான பரம அன்னையை அண்டி அழுதார். கண்ணீரை செந்நீராக மாற்றி ஆறாக பெருக்கினார். அன்னை தன் அன்பின் செல்வனைக் கைவிடவில்லை. புனித சாமிநாதர் அல்லும் பகலும் மன்றாடிவந்த மன்றாட்டுகளும் வீண் போகவில்லை.




இவ்வாறு அவர் ஒருநாள் மாதாவின் பீடத்தடியில் அமர்ந்து ஆத்ம இரட்சண்யப் பணியில் தான் அடைந்த வெற்றி தோல்விகளைப் பற்றி மாதாவிடம் மழலை மொழி

மொழிந்தார். திடீரென ஓர் உருவம் அவர் முன் தோன்றி புன்முறுவல் பூத்து நிற்பதைக் கண்டு சாமிநாதர் அந்த உருவம் தேவ தாய் என அறிந்து உளம் பூரித்துப்போனார். அன்னை, தன்னை அண்டின அபலையை நோக்கி, “சாமிநாதா! கேவலம், நீ ஒரு பாலை நிலத்திலே பயிர் செய்கின்றாய்; மழை கண்டு, மாநதி கண்டு மண் செழிக்கும் வரையிலும் அது வறண்ட சோலையாகத்தான் காட்சியளிக்கும்” என்று கூறி வல்லப மிக்கவரின் வரப்பிரசாத வள்ளன்மையே தாம் கூறிய மாரி; அது மக்கள் ஆன்ம வாழ்வு வளம் பெறும் வற்றாத ஜீவநதியாகப் பெருக வேண்டும்; அதற்கு வழி ஜெபமாலைப் பக்தி; ஆகவே தான், ஜெபமாலைப் பக்தியை அனைத்துலகமும் பரப்புமாறு பணித்து மறைந்தாள்.

மாதாவின் மகிழ்ச்சிச் செய்தி, மைந்தன் சாமிநாதருக்கு புத்துணர்ச்சியை எழுப்பியது. பீடத்தை விட்டு எழுந்தார். நகரெங்கும் சென்று ஜெபமாலைப் பக்தியைப் பரப்ப அல்லும் பகலும் அயராது உழைத்தார். உழைப்பின் பயனை அவர் அடைய அவருக்கு வெகு நாட்கள் பிடிக்கவில்லை. மக்கள் திரள் புனித சாமிநாதரை சூழ வளைந்துகொண்டது. அவரது பத்திரசம் ததும்பும் வார்த்தைகள் மக்கள் பலரை தன்பால் ஈர்த்தன. மக்கள் பெருமளவில் அவரின் உண்மைச் சீடர்களாயினர். பதிதர் அநேகர் நல்வழிப்பட்டனர். அவர் சென்றவிடமெல்லாம் வெற்றி! எங்கும் ஓரே வெற்றி!! மலர் மணிமாலையின் மங்காப் புகழ் திக்கெட்டும் சங்கநாதமெழுப்பின.

லா சலேத் (La Salette) திலும், மசபியே (Masabielle) விலும், கடைசியாக இந்த இருபதாம் நூற்றாண்டில் பாத்திமா (Fatima) விலும் அமல கன்னிகை ஏழைச் சிறுவருக்கு காட்சியளித்து மொழிந்த மொழிகளும் ஜெபமாலை ஜெபிக்கும் பழக்கத்தை மக்கள் அனைவரும் நடைமுறையில் கொண்டுவர வேண்டுமென்ற அடிப்படையிலேயே அமைந்திருக்கின்றன.

பொதுவுடைமைப் போர்வையிலே சிக்கித் தவிக்கும் மக்கள், மனம் மாறி, ஆன்ம ஒளிபெறுவதும் இந்த ஜெபமாலை பக்தியின் மூலமாகத்தான் என்பது மறுக்கப்படாத உண்மையாகும்.

பாரதத்திலே மத சுதந்திரம் உண்டு என்று ‘தம்பட்டம்’ அடித்துவரும் அதே நேரத்திலே, நாட்டின் ஒரு சில இடங்களில், மறைமுகமாகவும், நேரடியாகவும் கத்தோலிக்க மக்களுக்கு இழைக்கப்படும் இன்னல்களை நாம் பத்திரிகைகளிலே வாசித்து வருகிறோம். இஃதானது வருங்காலத்தில் நமக்கு ஏற்படப்போகும் கல்வாரிப் பயணத்தின் ஒத்திகை தான் என்பதை தூதன் வாசகர்களுக்கு ஞாபகப்படுத்துகிறோம். இந்த இடையூறுகளைக் கண்டு நாம் பின்வாங்கக்கூடாது. நமது கர்தினால் வண. கிராஸியாஸ் ஆண்டவரவர்கள் தமது சுற்றறிக்கையின் மூலம் கேட்டுக்கொண்டதற்கிணங்க, நாம் கூடி ஜெபிப்



போம். அசைக்க முடியாத நம்பிக்கையோடு ஜெபிப்போம். நம் நாட்டை ஆளும் தலைவர்களுக்கு அரசியல் விவேகத்தை அளித்து, நாட்டை நல்வழியிலிட்டுச் செல்ல தேவையான அருள் ஒளியை, அன்னை பாரதத் தாயிடம் கேட்போம். ஜெபமாலைப் பக்தி அனைத்துலகமும் பரவவேண்டும். இந்த நல்ல பணியைத்தான் சங். பெய்ட்டன் சுவாமிகள் நடாத்தி வருகிறார்கள். சுவாமிகள் தாம் செல்லுமிடங்களிலெல்லாம் ஜெபமாலை ஜெபிப்பதின் அவசியத்தை மக்களுக்கு வலியுறுத்திக்கொண்டு வருகிறார். ஜெபமாலையின் மகிமையைப்பற்றி அவர் “கடவுள் உயிர் வாழ்கிறார். கடவுளையும் மனிதனையும் இணைக்கும் சங்கிலி, ஜெபம். ஒரு மனிதன் தன்னிலே ஜெபிக்கும் பழக்கம் உள்ளவனாக இருந்தால், அவனும் கடவுளும் ஒன்று சேர்ந்து அதிசயிக்கத்தக்க காரியங்கள் பல செய்ய முடியும். ஒன்றுபட்டு ஜெபிக்கும் குடும்பத்தில், ஒன்றுபட்ட அன்பை, ஒருமனப்பட்ட உழைப்பை, ஏன் ஒன்றுபட்ட புதுமையைக்கூட காணலாம்” என்று பெருமிதத்துடன் கூறுகிறார்.

குடும்ப ஜெபமாலை இயக்கம் எவ்வளவு தூரம் பரவிப் படர்ந்து வெற்றி கண்டு வருகின்றதென்றால், சமீபத்தில் கிழக்காப்பிரிக்காவிலுள்ள மொசாம்பிக்கில் சுவாமிகள் ஆற்றிய ஜெபமாலை இயக்க சொற்பொழிவின்பொழுது இஸ்லாமிய மக்களும், மதக் குரவர்களும் பங்கு கொண்டு ஜெபமாலை இயக்கத்திற்கு ஆதரவு அளிக்கும் அளவிற்கு வளர்ந்திருக்கிறது.

எனவே தான், “கூடி ஜெபிக்கும் குடும்பத்தில் ஒற்றுமை குலையாது நிற்கும்” என்ற உண்மையை ஆய்ந்து தெளிந்து ஒன்றுபட்ட மனவெழுச்சியில், உள்ள ஆழத்தோடு நாம் ஜெபமாலை ஜெபிப்போம். விசேஷமாக பரிசுத்த ஜெபமாலை அன்னையின் மாதமாகிய அக்டோபர் மாதத்தில் நம் குடும்பங்களில் ஜெபமாலை ஜெபிக்கும் பழக்கத்தை நடைமுறைக்குக் கொண்டு வர நாம் ஒவ்வொருவரும் சங்கல்பம் எடுத்துக் கொள்வோம். அந்த நல்ல பணிக்கு பூரண வெற்றி கிட்டுமாறு, அண்டினவர்களின் ஆபத்துசகாயியான **அன்னை ஜெபமாலை மாதா**வை அண்டுவோம்.

**வாழ்க ஜெபமாலை அன்னை!**

---

<u>வரப்பெற்றோம்</u>

திவ்விய பூசை

(கிறீஸ்துவ வழிபாட்டின் உயிர் நிலை)

ஆக்கியோன்:

**ஜான் களத்தில் சே. ச.**

பக்கங்கள் 32  விலை $1\frac{1}{2}$ அணா

பலி பூசையின் அந்தரங்க அர்த்தத்தை உருக்க உணர்ச்சியோடு விளக்கிக் காட்டும் நூல்.

கிடைக்குமிடம்:

Bursar
St. Joseph's College
Tiruchirappalli

# வாதைகளின் பாதை

சங். ஜே. யல். மோத்தா, சே.ச.

*முதல் காட்சி :*

**ஷெண்பகனூர் திரு இருதய மடத்து நோயாளிகளின் கோவில்.**

அதோ பார்! 85 வயதானவரும், மங்கிய கண் பார்வை உள்ளவரும், மந்தச் செவியுள்ளவரும், வாத நோயால் பீடிக்கப்பட்டவருமான மகா. வந். மரிய அருள் பார்த் ஆண்டவர் பத்தி பற்றுதலோடு திவ்விய நற்கருணைநாதரை ஆராதித்துச் செபத்தியானத்தில் அமிழ்ந்தியிருப்பதைச் சற்றுக் கவனி. கண்களிலிருந்து பத்தி ரசம் பொங்கும் கண்ணீர் சுரக்கிறது. இவர்தான் திருச்சிராப்பள்ளியின் இரண்டாவது மேற்றிராணியாராக இருந்தவர். 1890ம் வருஷம் முதல் 1914-ம் வருஷம் வரை 24 ஆண்டுகளாக திருச்சி மேற்றிராசனத்தைப் பற்பல இக்கட்டு இடைஞ்சல்கள் மத்தியில் மனஞ்சலியாது ஆண்டுவந்தார். பஞ்சம், கலகம், கொள்ளை நோய் சகலமும் அவர் அருமை மந்தையைத் துன்புறுத்தியபோது அன்பும், அமைதியுமே ஆடையாக அணிந்த குணபூஷராய் விளங்கினார். மேற்றிராசனத்தின் முன்னேற்றத்திற்கு வழி வகுத்தார். அர்ச். அமலோற்பவ மாதா சபை கன்னியரைப் புதிதாக ஆரம்பித்தார். கனோனெஸ் அகுஸ்தீன் மடத்தாரையும், பரிசுத்த சிலுவை சபைக் கன்னியரையும், குளினி அர்ச். சூசையப்பர் சபைக் கன்னியரையும் சீமையிலிருந்து வரவழைத்தார். திரு இருதய சபை சந்நியாசிகளின் சபையையும் இவர்தான் ஸ்தாபித்தார். திருச்சி உயர்தர போதனாமுறை பள்ளியையும் நிறுவியவர் இவரே. இத்தனையும் வெற்றிகரமாக முடித்தபின் தேக அசௌக்கியத்தினிமித்தம் 1914-ம் வருஷம் தம்முடைய உதவி மேற்றிராணியார் மகா வந். அகுஸ்தீன் பெசாந்தி ஆண்டவர் அவர்களிடம் தமது மேற்றிராசன பொறுப்பை ஒப்படைத்துவிட்டு தனிவாசம் செய்ய ஷெண்பகனூர் திரு இருதய மடத்திற்குச் சென்றார்.

இங்கு 20 வருஷமாக பாரிசவாதத்தினால் பீடிக்கப்பட்டு சிலுவையில் அறையுண்ட திவ்விய சேசுவின் பலியில் பங்குபெற்றார். துன்பதுயர அப்போஸ்தலத்துவத்தை ஆரம்பித்தார்.

இத்தகைய சேவைக்கு உயிரளிப்பது சேசுவின் திரு இருதயத்தோடு அன்னியோன்னியமாய் ஒன்றித்து வாழ்வதே. இதைச் சுவை பார்த்தவர்போல் தோன்றினார் அவர் திவ்விய நற்கருணைநாதரை ஆராதித்தபோது. ஆத்தும இரட்சணியத்திற்காக வெயிலிலும் மழையிலும் அயரா உழைக்கும் மிஷனரிமார்களுக்கு வேண்டிய தேவ சகாயத்தை அடைந்து கொடுத்தார். சகல வேதனைகளையும் பொறுமையுடன் ஏற்றுக்கொண்டு உலக இரட்சகரோடு இரட்சணிய சேவை புரிந்துவந்தார். வாத நோயால் ஒரு கை வழங்காதிருந்தபோதிலும் மறு கரத்தைக்கொண்டே அனுதினம் ஒரு சுவாமியாருடைய உதவியுடன் பூசை பலி நிறைவேற்றி வந்தார்.

*மற்றொரு காட்சி :*

**படிக்கட்டுகளில் கம்பு ஊன்றி ஏறுகிறார்.**

ஷெண்பகனூர் திரு இருதய மடத்தில் திவ்விய நற்கருணை ஆசீர்வாதத்திற்கு மணி அடிக்கிறது. அதோ! மகா. வந். மரிய அருள் பார்த் ஆண்டவர் கம்பு ஊன்றி வாத நோயையும் பொருட்படுத்தாமல் படிக்கட்டுகளில் மெல்லமெல்ல மாடிக் கோவிலுக்கு ஏறி வருகிறார். ஒவ்வொரு படி எடுத்து வைப்பது ஓர் தேவ சிநேகமுயற்சி என்றே கருதவேண்டும். கோவிலில் முழங்காற்படியிடுகிறார். ஒரு பக்கம் சாய்ந்த மேரையாய்த் தோன்றுகிறார். வாத நோய் அவரைக் கீழே விழத்தாட்டப் பார்க்கிறது; ஆனால், தேவ சிநேக வலிமை அவரைத் தாங்கி நிற்கிறது. வாத நோய் அவர் முகத்தை விகாரப்படுத்த முயலுகின்றது; ஆனால் தெய்வீக காந்தி அவர் தூய வதனத்தை அதிக பரிசுத்தமாகத் துலங்கவைக்கிறது. தேவ நற்கருணை ஆசீர்வாதம் முடிந்ததும் நேரே மெதுவாக தமது அறைக்குச் செல்லுகிறார். அர்ச். சின்னப்பர் சொன்னவைகளை இவரும் சொல்லலாம், “எனக்கு உண்டாகும் பலவீனங்களிலும், இக்கட்டுகளிலும், கிறிஸ்துவைப்பற்றி நான் பிரியப்படுகிறேன்” II கொரி. 12, 10.

**அறையில் தனிவாசம் :**

அணையாத நெருப்பு சுடர் விட்டுக்கொண்டுதானிருக்கும். உண்மை தேவ சிநேகம் பிறர்சிநேகத்தில் துலங்கும். (Prayer and Love) “ஜெப சிநேக ஜீவியம்” என்றதோர் ஞானச் சுவை ததும்பும் புஸ்தகத்தை அவர் எழுதி வெளியிட்டார். அது அவருடைய சுய ஜீவியத்தின் பிரதிபிம்பம் என்றாலும் மிகையாகாது. (The Life of Jesus in our souls) “குருக்களிடம் சேசுவின் ஜீவியம்” என்பது அவர் எழுதித் தந்த இன்னொரு ஞானக் களஞ்சியம். குருக்களின் அர்ச்சியசிஷ்டதனத்துக்கு எவ்வளவு தூரம் இன்னும் உழைக்க விரும்பினார் என்பதற்கு அதுவோர் எடுத்துக்காட்டு.

இன்று நம் நாட்டில் வழங்கும், “திரு இருதய வணக்க மாதம்” அவர் எழுதியதே. “நான் பூமியில் அக்கினியைப் போட வந்தேன். அது பற்றி எரிய வேண்டும் என்பதல்லாதே, வேறென்னத்தை விரும்புகிறேன்,” என்ற உலக மீட்பரின வார்த்தைகளே வயோதிக வயதில் அவரை இவ்வளவு தூரம் பிறர் ஆத்தும ஈடேற்றத்தில் ஈடுபடுத்தியது. சமயா சமயம் தமது கரத்தை உயர்த்தி பட்டணங்களிலும், பட்டிக்காடுகளிலும்,

கடலோரங்களிலும் களைப்புற உழைக்கும் மிஷனரிகளேயும், கன்னியர்களேயும் அன்பாய்ஆசீர்வதிப்பார். அவரைச் சந்திக்கச் சென்ற வயது முதிர்ந்த குருக்களும், வாலிப குருத்துவ மாணவரும் "நமது நல்ல தந்தையோடு சல்லாபிக்கும்போது அவரின் ஞானுமிர்த வார்த்தைகள் நம்முடைய இருதயத்தை நமக்குள் பற்றியெரியச் செய்தன" என்று ஒருவாய்ப்பட கூறுகின்றனர்.

கடைசி காட்சி :

**அவர் அந்திய காலத்தின் கடைசி மாதம்.**

ஒரு மாதகாலமாக படுக்கையோடு ஒட்டிக்கிடந்தார். திவ்விய பலிபூசை நிறைவேற்றக்கூடாததே அவருக்குப் பெருங் கவலே. தேகம் இளைத்து, வர வர சுருங்கி நிறமும் மாற ஆரம்பித்தது. அன்ன பானம் இறங்கவில்லே. சூழ நின்றவர்கள் கண் கலங்க பய பக்தியோடு கடைசி தேவ திரவிய அனுமானங்களைப் பெற்ருர். "நான் போகிறேன். விடை கொடுங்கள். என் ஜீவியம் சிலுவை நிறைந்த ஜீவியம், நானே பலியாகப் போகிறேன். என் தேகக் கட்டு அவிழும் காலம் கிட்டியிருக்கிறது. கிறீஸ்துவோடு நித்திய ஒன்றிப்பை விரும்புகிறேன். எனது நேச சேசுவின் திரு இருதயத்தைத் தரிசிப்பேன். என்னுல் கூடிய அளவு சேசுவின் திரு இருதய பக்தியை பிரபலபடுத்தினேன். நித்தியத்திற்கும் அவரோடு ஒன்றித்திருப்பது எவ்வளவு பேரானந்தம்" என்று தமது மனதில் எழும்பிய எண்ணங்களே வெளியிட்டார். 1934-ம் வருஷம் நவம்பர் மாதம் 12-ம் தேதி நித்திய இளைப்பாற்றியை அடைந்தார், மகா வந். மரிய அருள் பார்த்தாண்டவர். வயது 86; சேசு சபையில் 65 வருஷம்; குருப்பட்டம் பெற்று 53 வருஷம்; மேற்றிராணியார் அபிஷேகமடைந்து 44 வருஷம்; சிலுவையின் அப்போஸ்தலத்துவம் 20 வருஷம். துன்ப துயரங்களின் அரிய சேவை எந்த அந்தஸ்திலும் மங்காமல் துலங்கும் என்பதை நமக்குக் காட்டினுர். அவரை நாமும் பின் செல்வோமாக!



## " ஆண்டவரில் மரிக்கிறவர்கள் பாக்கியவான்கள் "

**சமீபத்தில் மரித்த நமது வாசகர்கள், ஜெப அப்போஸ்தல சபை அங்கத்தினர்கள்**

திரு. S. சுவக்கீன் — காரைக்குடி
திருமதி. A. ஆரோக்கியமரியம்மாள் — மயிலாப்பூர், சென்னே.

"மரித்தோருக்காகப் பிரார்த்திப்பது பரிசுத்தமும் பிரயோஜனமுமான யோசனே" (2 மக்கபேயர் 12-42)

# ஞான உபதேசம்

## (புதுநன்மைப் பகுதியினர்)

தொடர்ச்சி

ஐந்து மந்திரங்களில் முக்கியமானவைகளேயும், சர்வேசுரன், எல்லாம் வல்ல சிருஷ்டிகர், நம் எல்லோருடைய தந்தை, தந்தையின் கட்டளையை மீறுதல் பாவம், கட்டளையை மீறியவர் பட்டபாடு என்பவைகளேயும் சிறுவர்கட்கு கற்பித்த பிறகு தாங்கள் உட்கொள்ளப் போகும் சேசுநாதரைப்பற்றி அவர்கட்கு அழகான முறையில் அறிவுறுத்த வேண்டும். முதலாவதாக சேசுநாதரின் பிறப்பைப்பற்றி இதற்கு ஆசிரியரின் பாடக்குறிப்பு :

| விஷயம் | முறை |
|---|---|
| 1. தமதிரித்துவத்தின் இரண்டாம் ஆளாகிய சுதனுகிய சர்வேசுரன் நம்மை இரட்சிக்க மனிதனுகப் பிறந்தார். | 1. தமதிரித்துவத்தின் படம், ஆதாம் ஏவாளேப்பற்றிய படம், நரகத்தின் படம் இவைகள் உதவியால் 'இரட்சிப்பு' என்பதை விளக்குவேன். |
| இரட்சிப்பு—பெரிய ஆபத்திலிருந்து, கேட்டிலிருந்து காப்பாற்றுதல். | 2. கபிரியேல் தூதன் மாதாவுக்கு மங்களங் கூறிய படம், சேசுநாதர் பிறப்பின் படம் இவைகளேக்கொண்டு சேசுவின் பிறப்பை எடுத்துரைப்பேன். |
| | சேசுநாதருக்கு நம்மீதுள்ள அளவுகடந்த அன்பை சிறுவர்கள் உணரச் செய்வேன். |
| **அனுபவ வேலே :** குடில் செய்தல். | ஆசிரியரும் மாணவரும் சேர்ந்து ஒரு சிறிய குடில் செய்து, அதற்குள் அட்டையில் தேவமாதா, சூசையப்பர், சேசுபாலன் படம் ஒட்டி, வெட்டி அவ்வுருவங்களே வைக்கலாம். |
| 2. சுவாமி பிறந்த எட்டாம் நாள் அவருக்கு சேசு என்று பெயரிட்டார்கள். சேசு என்ற பெயருக்கு அர்த்தம் : நம்மை இரட்சிக்கிறவர். | நமக்கு நம் பெற்றேர் பெயர் வைப்பதுபோல சேசுநாதருக்கும் பெயர் வைத்தார்கள். ஆனுல், அந்தப் பெயர் சர்வேசுரனே சம்மனசு வழியாக அறிவித்த பெயர். — நல்ல பெயர். — வல்லமை பொருந்திய பெயர். — நம்மைக் காப்பாற்றும் பெயர். |

இராயப்பர் சேசுநாதர் நாமத்தால் முடவனை சொஸ்தப்படுத்துகிறார். பு. வே. அதி. 99

இந்த நல்ல சம்பவத்தைக் கூறி "சேசுவே என்னை இரட்சியும்" என்று அடிக்கடி சொல்லத் தூண்டுவேன்.

அனுபவ வேலை
"சேசு"

சேசு என்ற நாமத்தை பெரிய எழுத்துக்களில் அழகாக எழுதி அதை அலங்கரிக்கச் செய்வேன்.

பயிற்சி வினாக்கள்:

நம்மை இரட்சிக்க மனிதனாய்ப் பிறந்தது யார்? இரட்சிக்க என்றால்? எதிலிருந்து காப்பாற்ற? சுதனுக்கு என்ன பெயர் வைத்தார்கள்? ஏன் சேசு என்ற பெயர் நல்ல பெயர்? நாம் அடிக்கடி எந்தப் பெயரைச் சொல்ல வேண்டும்? ஏன்?

G. A. S. J.

# பொய்யா விளக்கு

## கிறிஸ்துவின் அரசைப் பரப்ப ஆசிக்கும் நண்பர்களுக்கு

கிறிஸ்து அரசர், அவரது திருச்சபை, அவரது அன்புச் சுப செய்தி முதலியவற்றைக் கத்தோலிக்கரல்லாத நம் சகோதரர்களுக்குத் தெரியப்படுத்த, விசுவாச ஒளியைப் பரப்ப நோக்கம் கொண்டது பொய்யா விளக்கு துண்டுப் பிரசுரம். இவைகளை வாங்கி கத்தோலிக்கரல்லாத நம் நண்பர்களுக்கு இலவசமாய் வழங்க வீரம் படைத்தவர்கள் தேவை. பொய்யா விளக்கின் வெளியீடு மாதம் ஒரு முறை வெளி வரும். 4 பக்கங்கள் கொண்ட 4 பிரதிகளுக்கு வருடக் கட்டணம் ரூ. 1 தான். ஆசிப்பவர்களுக்கு முழு விவரம் அனுப்பப்படும்.

பொய்யா விளக்கு ஒளியுடன் நற்சேவை புரிய உங்கள் செபத்தை வேண்டுகிறது.

"பொய்யா விளக்கு"
M. Asirvatham S. J.
De Nobili College, Poona 6



# சிறுவரின் தூதன்

## இந்தியாவில் கிறிஸ்துவின் இராட்சியம் வரும்படியாக நீ என்ன செய்கிறாய்?

[இந்தக் கேள்விக்கு நமது சிறுவர் சிறுமியர் திருப்தியளிக்கும் முறையில் பதிலிறுத்திருக்கின்றனர். இதோ மூன்று பேருடைய பதில்—ஆசிரியர்.]

A. சவரியப்பன் 4-ம் பாரம், தூய தெரேசாள் மடம், மரவனேரி, சேலம்.

சேசுவில், அன்புள்ள நண்பன் பீட்டருக்கு, வணக்கம். நண்பா, உன் கடிதம் கிடைத்தது. நான் சுகம். இது போல் உன் சுகம் அறிய அவா.

நண்பா, "இந்தியாவில் கிறிஸ்துவின் இராட்சியம் வர நீ என்ன செய்கிறாய்?" என்ற கேள்வியை நீ கேட்டிருந்தாய். இதோ பதில்: நமது பாரத நாடு சுதந்திரமடைந்து 8 ஆண்டுகள் ஆகின்றன. அது லௌகீகத் துறையில் பாராட்டத்தக்க முறையில் முன்னேறியுள்ளது. ஆனால் உண்மைக் கடவுளை அறிவதில் அதிகமாக முன்னேறவில்லை எனலாம். இதற்காக நாம் பாடுபட வேண்டும்.

நான் இந்தியா மனந்திரும்ப வேண்டிக் கொள்வதோடு "உமது அரசு வருக" என்ற மனவல்ய ஜெபத்தையும் அடிக்கடி சொல்லுகிறேன். அர்ச். சவேரியார் எவ்வளவு ஆன்மாக்களை மனந்திருப்பினாரோ, அவ்வளவு ஆன்மாக்களை அர்ச். தெரேசம்மாள் ஜெபத்தினால் மனந்திருப்பினாளாம். ஆகையால் நான் பாலர் சபை ஜெபத்தையும் சொல்லுகிறேன். ஜெபத்தோடு ஒறுத்தலையும் சேர்த்தால் காரியம் வெற்றி பெறும். எனவே அர்ச். தெரேசாளைப் போல சிறு காரியங்களில் நான் பிரமாணிக்கமாய் இருக்கிறேன். சேசு முதலில் சாதித்தார். பின்பு தான் போதித்தார். ஆகையால் நான் என் கடமைகளை எல்லாம் சேசுவின் இராட்சியம் இந்தியாவில் வரும்படியாக எல்லோருக்கும் முன்மாதிரிகையாய் இருக்கும்படி செய்கிறேன்.

சாதனையோடு போதனையும் சேர்ந்தால் நன்மை பயக்குமாதலின் சிறு பிரசாரத்தையும் கைக்கொள்ளுகிறேன். எனக்கு பிரியமான இந்து மாணவனைத் தேர்ந்தெடுக்கிறேன். சமயா சமயங்களில் கிறிஸ்துவைப் பற்றிய சம்பாஷணைகள் செய்கிறேன். அவன் மனந்திரும்ப வேண்டிக்கொள்வதோடு சிறு ஒறுத்தல் முயற்சிகளையும் செய்து ஒப்புக்கொடுக்கிறேன். என் இந்து நண்பன் கிறிஸ்துவை அறிய ஓரிரு புத்தகங்களை வாசிக்கச் செய்கிறேன்.

இந்தியாவில் நமது இந்து சகோதரர்கள் மாரி, காளி, லக்குமி, சரஸ்வதி போன்ற பெண் தெய்வங்களை அதிகமாக வணங்குகின்றனர். ஆகையால் நமது முப்பொழுதும் கன்னிகையான மரியாயைப் பற்றி என் சிநேகிதனுக்கு அறிவித்து பின் மாதாவின் மூலம் சேசுவை அறிய பிரயாசைப்படுகிறேன். ''இந்தியாவே உன் இரட்சணியம் உன் மக்களாலே நிறைவேறும்'' என்ற பரிசுத்த பிதா 13-ம் சிங்கராயரின் பொன் மொழிகள் உண்மையாகும்படி பாடுபட ஆசிக்கிறேன்.

இக்காரியங்களை மும்முரமாக நிறைவேற்ற இதோ விசுவாசப் பரம்புதல் ஞாயிறு அக்டோபர் மாதம் 23-ந் தேதி வருகிறது. அன்று நாம் பாவசங்கீர்த்தனம் செய்து திவ்விய பூசை கண்டு சுத்தக் கருத்துடன் திவ்ய நன்மை வாங்கி இக்கருத்துக்காக ஒப்புக்கொடுப்போம். மிஷன் நாடுகளின் பாதுகாவலர்களான அர்ச். சவேரியாரையும் அர்ச். தெரேசம்மாளையும் பார்த்து மன்ருடுவோம். ''அன்னையே எங்கள் செல்வ நாடு, அஞ்ஞானம் நீங்கி உன்னுடாகிட விண்ணவனும் உன் சுதன் சேசுவை, வேண்டி மன்ருடிடாயே தாயே.''

இப்படிக்கு உனது அன்புள்ள நண்பன்

*ஞ. மனுவேல் ராஜ், நான்காம் படிவம், அர்ச். சூசையப்பர் தர்ம இல்லம், தேவகோட்டை.*

அன்புள்ள தோழர்களே,

சேசுவின் திரு இருதயம் இந்தியாவில் எங்கும் எல்லோர் இருதயத்திலும் அரசாட்சி புரிய வேண்டுமென்பதே என் ஏக ஆவல், இந்நோக்கமே எனது இருதயத்தில் முதலிடம் பெற்றுள்ளது. இக்கருத்தோடே என் ஜீவியத்தை நடத்தி வருகிறேன்.

எப்படியெனில், நான் காலையில் எழுந்ததும் சேசுவின் திரு இருதயமே என்ற காணிக்கை ஜெபத்தைச் சொல்லி, உலக முழுவதும் நடக்கும் பலிபூசைகளுடன் ஒன்றித்து அவைகளை கிறிஸ்துவின் இராட்சியம் பரம்பும்படியாக ஒப்புககொடுக்கிறேன். இக்கருத்தோடே தினமும் பூசையை ஜெபித்து திவ்விய நன்மையை உட்கொண்டு அடிக்கடி திவ்விய நற்கருணைநாதரைச் சந்தித்து வருகிறேன். அர்ச். குழந்தை தெரேசைப் போல் ஜெபத்தினுலும் சிறு சிறு ஒறுத்தல் பரித்தியாகங்களாலும், இந்தியா முழுவதிலும் கிறிஸ்துவின் ஆட்சியைப் பரப்ப ஆசிக்கிறேன். என் உடன் மாணவர்களிடம் சமயோசிதமான ஒரு சில அன்பான வார்த்தைகளால் அவர்களிடம் சேசுவின் மட்டில் அன்பையும், ஆத்ம ஆவலையும் வளர்க்கப் பிரயாசைப் படுகிறேன். இந்து மாணவர்களை பார்க்கும்போது சேசுவின் திரு இருதயமே இவர்களிடம் உமது இராட்சியம் வருக என ஜெபித்து வருகிறேன். நான் சேசுவின் சிறிய அப்போஸ்தலனுக உழைத்து அவரது நேச சாட்சியாக மரிக்கும் பாக்கியம் எனக்கு கிடைக்கும் படியாகவும், சேசுவின் நேச அப்போஸ்தலர்கள் அதிகரிக்கவும், அர்ச். பாப்புவின் விசேஷ கருத்துக்கள் நிறைவேறும்படியாகவும், வேண்டிக்கொள்கிறேன். எங்கள் இல்லத்தில் திரு இருதய அரசாட்சியை ஸ்தாபித்து கிறிஸ்துவின் ஆட்சி எங்கும் ஓங்கும்படியாகவும் வேண்டி வருகிறேன். நான் ஜெப அப்போஸ்தல சபை, சற்பிரசாத சபை, விசுவாச பரம்புதல் சபையில் சேர்ந்துள்ளேன். நான் ஜெபத்தினுல் அநேக ஆத்துமாக்களை சேசுவிடம் கொண்டு சேர்க்க முடியும் என்ற நம்பிக்கையோடும் ஜெபித்து வருகிறேன். மரியாயின் மாசற்ற இருதயமே இந்தியாவுக்காக வேண்டிக் கொள்ளும்.



அர்ச். சவேரியாரே, அர்ச். குழந்தை தெரேசம்மாளே இந்தியாவுக்காக வேண்டிக்கொள்ளும் என தினமும் ஜெபித்து வருகிறேன். தோழர்களே நீங்களும் வாருங்கள், வீறுகொண்டெழுங்கள். நமது நேச சகோதரரும் அன்பின் அரசருமாகிய கிறிஸ்துவின் ஆட்சி இந்தியா முழுவதிலும் ஓங்க வேண்டும் என்ற ஆர்வம் நம்மை தட்டி எழுப்ப வேண்டாமா, இதயம் துடி துடிக்க வேண்டாமா, அன்பு பொங்க வேண்டாமா. என் ஆருயிர் தோழர்களே உறங்கிக்கொண்டு இராதீர்கள். உலகில் உழைக்கும் காலம் மிக மிகச் சொற்பம். காலத்தை வீணுக்க வேண்டாம். கட்டுண்டோம் பொறுத்திருப்போம் காலம் வரும் என்பதற்கிணங்க இதோ இப்போதே நல்ல காலம் துவக்குகிறது. நமது உயிருள்ள விசுவாசத்தை எங்கும் வீசச் செய்வோம். குன்றின் மேலிட்ட தீபம் போல் பிரகாசிக்கச் செய்வோம். நமக்கே வெற்றி, நம் நாட்டிற்கே வெற்றி, கிறிஸ்துவின் ஆட்சிக்கே வெற்றி. கிறிஸ்து ராஜா வாழ்க ! உம்முடைய இராட்சியம் வருக.! !

*(பி. ஜே. ப்ளோரா, 4-ம் படிவம், பெத்லேகம் உயர்தர பெண்பாடசாலை, உதகமண்டலம்.)*

எனது சங்கைக்குரிய தந்தை அறிவது :

நான் ஒரு கத்தோலிக்க ஏழை சிறுமி. என் தாய் நாடாகிய இந்தியாவில் கிறீஸ்துவ ராஜ்யம் வரும்படி ஆவலுடன் விரும்புகிறேன். காலையில் பூசைக்கு சென்று கிறீஸ்துவின் ராஜ்யம் பரம்பும்படி பிதாவுக்கு ஒப்புக்கொடுக்கிறேன். பாடசாலையில் ஓய்வு நேரங்களில் அஞ்ஞான பிள்ளைகளை அழைத்து சர்வேசுரனின் ஜீவியத்தை எடுத்துரைத்து கோவிலுக்கும் அழைத்துக்கொண்டு போகிறேன். அவர்களுக்கு நான் முன்மாதிரிகை காட்டி கிறீஸ்துவர்களின் ஒழுக்கத்தை கண்டு கிறீஸ்துவ வேதத்தில் பற்றுதல் ஏற்பட செய்கிறேன். எல்லா ஜெபங்களிலும் மிகவும் மகிமை பொருந்திய பரிசுத்த ஜெபமாலை ஒப்புக்கொடுப்பதுமல்லாமல் மற்ற நாட்டினர் மதத்தை பரப்புவதற்கு கருவியை உபயோகித்தால் நான் ஜெபமாலை என்னும் பரிசுத்த கருவியை ஒப்புக்கொடுத்து அன்னையின் மூலமாக பரம்பச் செய்கிறேன். விடுமுறை நாட்களில் சிறுவர்களை அழைத்து கிறீஸ்துவர்களின் அடையாளமாகிய சிலுவை அடையாளத்தையும் கர்த்தர் படிப்பித்த ஜெபத்தையும் சொல்லிக்கொடுக்கிறேன். என் சுற்றுப்புறத்தினர் ' நரக வாசல் ' என்னும் படக்காட்சிக்கு போகிறவர்களை

அழைத்து, சர்வேசுரனுக்கு நஷ்டத்தை வருவிப்பதுமல்லாமல் சாவான பாவத்தை கட்டிக்கொள்கிறீர்கள், தாங்கள் அதை விட்டு தள்ளுவதால் சர்வேசுரன் பாவத்தை மன்னித்து தங்களின்மீது இரக்கத்தை காட்டுகிறார் என்று அவர்களை மனந்திருப்பினேன். நம் கிறீஸ்துவ வேதத்தை பரவவிடக்கூடாது என்று சில அரசியல் அதிகாரிகள் கருத்துடன் இருக்கிறார்கள். அவர்களுக்கு நல்ல ஆலோசனையை கொடுத்தருள நல்லாலோசனை அன்னையிடம் ஜெபிக்கிறேன். ஓர் கட்டிடத்திற்கு அஸ்திவாரம் எப்படி முக்கிய அவசியமோ அது போல் கிறீஸ்துவ வேதத்தை பரப்ப குருக்களும் கன்னியரும் அவசியம். ஆகையால் அப்பரிசுத்த பாக்கிய அந்தஸ்தில் சேர்ந்து என் தாய் நாட்டில் கிறீஸ்துவ ராஜ்யம் பரம்ப இன்னும் ஊழியம் செய்ய உறுதிகொண்டு, சில ஊழியங்கள் செய்துகொண்டு வருகிறேன். இன்னும் இந்திய நாட்டின் கிறீஸ்துவர்களுக்குள்ளே பிறர்சிநேகமாகவும் சமாதானமாய் வாழும்படியும் அன்னையிடம் ஜெபித்து வருகிறேன். இவ்வுலகில் சேசு தாழ்ச்சியை மக்களுக்கு முன்மாதிரிகையாக காட்டினார். அம்மேலான தாழ்ச்சி என்னும் புண்ணியத்தை இக்கருத்துக்காக கையாண்டு வருகிறேன். இவ்விதமாக ஜீவிய வாழ்க்கையை அப்போஸ்தல வேலையின் மூலமாகவும் கிறீஸ்துவின் ராஜ்யம் என் தாய் நாட்டில் செழித்து வளரச் செய்கிறேன். மரியே உம்முடைய திருக்குமாரனின் நாமம் இந்தியாவில் வருக !

—o—

# சிறுவரின் தூதன் பரிசு

இம்மாதத்தில் எழுதுவதற்கான பொருள் :

" *ஆண்டவருடைய பாதைகளைச் செவ்வையாக்குங்கள்* "

எழுதுவது 40 வரிகளுக்கு மேற்படாமல் இருக்கவேண்டும். உன் பெயர், வயது, வகுப்பு, ஊர் இவற்றைக் குறித்து சுவாமியார் அல்லது ஆசிரியரின் கையொப்பத்துடன் அக்டோபர் மாத முடிவிற்குள் வந்து சேரும்படி கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பவும்.

மானேஜர்
திரு இருதயத்தூதன்
செயின்ட் மேரீஸ், த. பெ. 56
மதுரை.

Manager
The Messenger of the Sacred Heart
St. Mary's, P. B. 56.
MADURAI.




*கேள்வி : 1. அவஸ்தையாக இருக்கும் ஓர் கத்தோலிக்கன் அவஸ்தை நன்மை வாங்க ஆசிக்கிறான். பங்கு குரு அச்சமயமில்லை. அப்போது அவஸ்தை நன்மை யார் அவனுக்கு அளிக்கலாம்? சாதாரண மனிதன் அளிக்கலாமா?*

M. S. போளூர், வ. ஆ.

*பதில் :* அவஸ்தையாயிருக்கும் கத்தோலிக்கனுக்கு பங்குக் குரு இல்லாத சமயத்தில் வேறு எந்தக் குருவானவரும் அவஸ்தை நன்மை அளிக்கலாம். சாதாரண மனிதன் திவ்ய நன்மை அளிக்க முடியாது.

மிகவும் விசேஷ சந்தர்ப்பங்களில்தான் வியாதிக்காரர்களுக்கோ, சிறையிலுள்ளவர்களுக்கோ வேத கலாபனையில் சிக்கியவர்களுக்கோ தேவ நற்கருணையை எடுத்துச் செல்லும்படியாக மேற்றிராணியார் குருத்துவம் பெறாதவர்களை அனுமதிக்கலாம். இவ்விதமாகவே முற்காலத்தில் தார்சிஸ் என்ற சிறுவன் சிறையிலுள்ளவர்களுக்கு தேவ நற்கருணையை எடுத்துச் செல்லும்போது விரோதிகளின் கையில் அகப்பட்டு உயிர்துறந்ததாக அர்ச். தார்சிஸ் சரித்திரத்தில் வாசிக்கிறோம். தற்காலத்தில் இந்த விசேஷ உத்தரவு வெகு அபூர்வமாகவே அளிக்கப்படுகிறது.

*கேள்வி : 2. இந்து நண்பர் ஒருவர் என்னிடம் கேட்கிறார், பொதுத் தீர்வையின் போது பாவிகளும் நல்லவர்களும் கடவுளைக் காண்பார்களா ?' என்று. இதற்கு விடை தேடியபோது 'காண்பார்கள்,' என " ஞானோபதேச தடாகம்," என்னும் புத்தகத்தில் 238ம் பக்கம், 16ம் வரியில் இருக்கிறது. அப்படியானால் பாவிகள் ஒருக்காலும் கடவுளைக் காண மாட்டார்கள் என்னும் வாக்கியம் எப்படிச் சரியாகும்? விளங்கவில்லை. தயவு செய்து இதை விளக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.*

A. ரா., கடியபட்டணம்.

*பதில் :* " ஞானோபதேச தடாகம் " என்னும் புத்தகத்தில் ' அவர்களெல்லோரும் ( நல்லவர்களும் பாவிகளும் ) அவரைக் காண்பார்கள்,' என்று காணக்கிடக்கின்றது மெய். ஆனால் நல்லவர்கள் அவரைக் காண்பார்கள் என்பதற்கும் பாவிகள் அவரைக் காண்பார்கள் என்பதற்கும் பாரதூர வித்தியாசமுண்டு. நல்லவர்கள் தங்கள் அன்பின் தேவனை கண்டு சுகித்தனுபவிப்பதற்கான முறையில் மகிமைப் பிரதாபத்தோடு அவரைக் கண்டு களிப்பார்கள். பாவிகளோவென்றால் அவரைக் காணுங்கால் அவருடைய நீதியையும் கோபாக்கினையையுமே காண்பார்களாதலால் அவரை ஏறெடுத்து பார்க்க முதலாய் துணியாமல் அஞ்சி நடு நடுங்கி கிடப்பார்கள். " அப்போது மலைகளை நோக்கி : எங்கள் மேல் விழுங்களென்றும், குன்றுகளை

நோக்கி: எங்களை மூடிக் கொள்ளுங்களென்றும் சொல்லத் துவக்குவார்கள்,'' (லூக் 23/30) என்ற சுவிசேஷ வசனம் இவர்களுக்கு முற்றும் பொருந்துவதாகும். இந்நிலையில் இவர்கள் கடவுளைக் காண்பதாக எப்படிச் சொல்ல முடியும். எனவே நல்லவர்கள் கடவுளை முக முகமாய்த் தரிசித்து பேரின்பம் அடையும்போது, பாவிகள் கடவுளின் கோபாக்கினைக்கு ஆளாகி அந்தக் காட்சியைக் காணாமல் இருக்கவே விரும்புவார்கள்.

ஞான உபதேசப் புத்தகத்திலும் சரி, வேறு எந்தப் புத்தகத்திலும் சரி வார்த்தையை மாத்திரம் பிடித்துக்கொள்ளாமல் வார்த்தையின் அர்த்தத்தையும் உணர்ந்து கொள்ள முயற்சிப்பதே புத்தியாகும். அம்முறையில் நீங்கள் 'பாவிகளும் அவரைக் காண்பார்கள்' என்ற சொற்றொடருக்கு அர்த்தம் காண முயன்றதுபற்றி உங்களை மெச்சத்தான் வேண்டும்.

**கேள்வி: 3. "திரு இருதய ஆசீர்வாத" பகுதிக்கு நாங்கள் எவ்விதம் கட்டணம் அனுப்பலாம்?**

**M. A. S. பூவாக்பிட்டிய,**
**இலங்கை.**

**பதில்:** இலங்கை நேயர்கள் "திரு இருதய ஆசீர்வாத" பகுதிக்கு கட்டணம் அனுப்பவேண்டியதாயின் முறைப்படி இலங்கை சர்க்காரிடம் "அனுமதிச் சீட்டு" (Permit) பெற்று மணியாடர் மூலமாக பணம் அனுப்பலாம்; அல்லது சிறு தொகைகளுக்கு தபாலாபீஸிலிருந்து பிரிட்டிஷ் போஸ்டல் ஓர்டர் (British Postal Order) வாங்கி திரு இருதய தூதன் காரியாலயத்திற்கு அனுப்பிவிடலாம். இலங்கை போஸ்டல் ஓர்டர் (Ceylon Postal Order) இந்தியாவில் சாதாரணமாகச் செல்லுபடியாகாது.

**கேள்வி: 4. சினிமா படங்களில் உள்ள வேதப் பாட்டுகளை நாங்கள் கோவிலில் அல்லது வீட்டில் செபஞ் சொல்லும் இடங்களில் பாடலாமா?**

**M. A. S. பூவாக்பிட்டிய.**

**பதில்:** வேத பாடல்கள் என்று சொல்லும்போது நமது சத்திய வேத பாடல்களையே குறிக்கிறீர்கள் என்று நினைக்கிறேன். இம்மாதிரிப் பாடல்களை வீட்டில் பாடுவதற்கு எவ்வித தடையுமில்லை. கோவிலில் பாடுவதற்கு மேற்றிராணியாருடைய அனுமதி அவசரம்.

**கேள்வி: 5. "புரட்டஸ்தாந்தியர்" ஏன் கத்தோலிக்க மதத்தை எதிர்க்கிறார்கள்?**

**M. A. S. பூவாக்பிட்டிய.**

**பதில்:** இந்தக் கேள்விக்குப் பதில் "புரட்டஸ்தாந்திய"ருக்குத் தான் தெரியும்.

**கேள்வி: 6. பூசை ஆரம்பிக்குமுன் சுவாமியார் சனங்களின் மீது ஏன் தீர்த்தம் தெளிக்கிறார்? இதன் காரணம் என்ன?**

**M. A. S. பூவாக்பிட்டிய.**

**பதில்:** எல்லா நாட்களிலும் அல்ல; ஞாயிறு, கடன் திருநாட்களில்தான் திவ்விய பூசைக்கு முன் தீர்த்தம் தெளிக்கும் சடங்கு நடந்தேறுகின்றது. முற்காலத்தில் பாஸ்குத் திருநாளிலும் இஸ்பிரீத்துசாந்துவின் திருநாளிலும் நடத்தப்பட்ட ஞானஸ்நான சடங்கை இது குறிக்கின்றது. ஏனெனில், இப்போது நாம் கொண்டாடும் ஞாயிற்றுக்கிழமைகள் அத்தினங்களில் நடந்த பரம இரகசிய சம்பவங்களின் தொடர்ச்சியாகும்.

'சிறிது நேரத்தில் குருவும் அவருடன் சேர்ந்து விசுவாசிகளும் அதியுன்னத பூசைப் பலியை ஒப்புக்கொடுக்கப்போவதனால் அவர்கள் எவ்வளவு பரிசுத்தமுள்ளவர்களாக இருக்க வேண்டும்! நம்மைப் பாவத்தினின்றும் முழுதும் கழுவி கடவுளுடைய பரிசுத்த பிள்ளைகளாக்கிய ஞானஸ்நானத் தண்ணீரை இத்தீர்த்தம் நமக்கு நினைப்பூட்ட வேண்டும்.'* இச்சடங்கின்போது "ஆண்டவரே, நீர் ஈசோப் என்கிற புல்லினால் என்மேல் தெளித்தருளுவீர்; நானும் சுத்தமாவேன். நீர் என்னைக் கழுவுவீர் வெண்பனிக் கட்டியிலும் தூய்மையாவேன்" என்பதாக தொடங்கிப் பாடப்படும் சங்கீத வசனங்கள் இக்கருத்தையே நமக்கு அறிவுறுத்துகின்றன.

* தினசரி பூசைப் புத்தகம், 50-ம் பக்கம் காண்க.

**கேள்வி: 7. கோவாப் பிரச்சனையைப்பற்றி தங்கள் கருத்தென்ன?**

**M. A. S. பூவாக்பிட்டிய.**

**பதில்:** அரசியல் பற்றிய காரியங்களில் 'திரு இருதயத் தூதன்' தலையிடுகிறதில்லை.

---

## ஜெப அப்போஸ்தல சபையாரின் ஞானப் பொக்கிஷம்
## அக்டோபர் 1955

| | | | |
|---|---|---|---|
| பிறர்சிநேகக் கிரிகைகள் ... | 12152 | தன்னைத்தானே ஜெயித்தது | |
| ஆத்தும சோதனை ... | 4059 | ஆசை நன்மை ... | 18969 |
| திவ்விய நன்மை ... | 2419 | கஸ்தி, வேதனை துன்பம் ... | 4557 |
| வேலை செய்த நேரம் ... | 1674 | ஞானவாசகம் ... | 3593 |
| மவுனமாயிருந்த நேரம் ... | 12152 | பற்பல புண்ணிய முயற்சி ... | 15190 |
| திவ்விய பூசை கண்டது ... | 2479 | திவ்விய நற்கருணை சந்திப்பு | 15386 |
| திவ்விய பூசை செய்தது ... | | சிலுவைப்பாதை ... | 1416 |
| ஆத்தும சம்பந்தமான தர்ம | | கீழ்ப்படிதல் முயற்சி ... | 15160 |
| கிரிகை ... | 15190 | தியானம் ... | 3036 |
| ஒறுத்தல் முயற்சிகள் ... | 19903 | மனவல்லய ஜெபம் ... | 151850 |
| பற்பல ஜெபங்கள் ... | 29504 | சரீர சம்பந்தமான தர்ம | |
| ஜெபமாலை ... | 6258 | கிரிகை ... | 2450 |
| பிறர்சிநேகத்துக்கடுத்த | | விசேஷ துர்க்குணங்களின் | |
| சம்பாஷணை விளையாட்டு ... | 3038 | மேல் கொண்ட ஜெயம் ... | 15190 |

# விசுவாசப் பரம்புதல் ஞாயிறு

## 23 அக்டோபர் 1955

நமது ஆண்டவராகிய சேசுக் கிறீஸ்துவின் போதனைகளை அறியாத மக்களிடம் திருச்சபையைப் பரப்ப வேண்டிய திருப்பணியில் ஒத்துழைப்பது நமது மகத்தான கடமையல்லவா? இதை மீண்டும் வலியுறுத்தும் வகையில், வேத போதக ஞாயிறு வருகிறது.

முக்கியமாக ஆப்பிரிக்கா, ஆசியா, ஓசியானியாப் பிரதேசங்கள் வேத போதகத் தளங்களாம். இப்பகுதியில் வாழும் பல கோடி மக்களில் மிக மிகப் பெரும்பான்மையினர் கிறீஸ்துவரல்லாதார். இங்கு கத்தோலிக்கரின் தொகை வெகு வெகு சொற்பம். அத்தோடு சீனாவிலும், வியட்நாமின் பெரும் பகுதியிலும் நடைபெறும் வேத கலாபனைகள் திருச்சபையின் அமைப்பை சீர்குலைத்து கத்தோலிக்கர்களை சிதறடிப்பதையும் நாம் நினைவில் கொள்ளவேண்டும். மற்ற இடங்களிலோ திருச்சபையை பலாத்கார முறையில் நேரடியாகத் தாக்குகின்றனர்; அல்லது திருச்சபையின் முன்னேற்றத்திற்கு மறை முகமாக இடறல் விளைக்கின்றனர்.

இந்நிலையில் விசுவாசப்பரம்புதல் திருச் சங்கத்தின் செயலாளரும் பாப்பரசரின் வேத போதக சபையின் தலைவருமான அதி. வந். பீற்றர் சிஜிஸ்மொந்தி ஆண்டகையின் வேத போதக ஞாயிறு விண்ணப்ப அறிவுரை நமது கருத்தைக் கவரவேண்டும்.

கிறீஸ்துநாதரின் இரட்சண்யப் பலனை பலநூறு ஆண்டுகளாக அனுபவித்து வரும் கத்தோலிக்க பெரு மக்கள் தங்கள் வேதபோதகக் கடமையைத் தீர உணரவேண்டும். ஜீவனுள்ள கிறீஸ்துவ வாழ்க்கை நம்மிடம் உண்டானால் நமது முழு சக்தியையும் செல்வாக்கையும் பயன்படுத்தி இக் கடமையை நிறைவேற்ற முன்வரவேண்டும். கத்தோலிக்கர் அனைவரும் அசமந்தத்தைத் தவிர்த்து கிறீஸ்துவின் வெற்றிக்கு தங்கள் ஒத்துழைப்பை அளிப்பார்களாக! தங்கள் ஜெப தபங்களாலும் தாராள மனதோடு கூடிய காணிக்கையாலும் சுவிசேஷத் தூதர்களுக்கு துணைநிற்பார்களாக. நமது மேற்றிராசனங்களிலிருந்து வேத போதகர்கள் எத்திசையும் சென்று எல்லா நாடுகளையும் மனம் திருப்ப ஆசிப்பார்களாக. எல்லா விசுவாசிகளும், முதலிலிருந்து கடைசிவரை ஒவ்வொருவரும் இவ்வளவு மகத்தானதும் புனிதமுமான திருப்பணிக்கு தாங்கள் அர்ப்பணிக்கப்பட்டவர்கள் என்பதை உணர்ந்து செயலாற்றுவார்களாக.

ஆதலின் விசுவாசப் பரம்புதல் ஞாயிறுக்கு ஆயத்தமாக உள்ள இந்த இடை வேளையில், நாம் வேத போதக நாடுகளுக்காக அதிக உருக்கத்தோடு ஜெபிக்க வேண்டும்; வேத போதக அழைத்தலை அதிக கவலையோடு பராமரிக்க வேண்டும்; வேதபோதக காணிக்கைகளை அதிகமதிகமாக அளிக்க வேண்டும் என்ற ஒழுங்கு முறையை முழுமனதோடு கடைப்பிடிப்போமாக.



# "பாப்பரசரின் பூசைக் கடியாரம்"

கடந்த மாத இதழில் செப்டம்பர் மாத பூசைக் கடியாரம் இன்னும் பூர்த்தியாகவில்லையென்று தெரிவித்து அம்மாதத்தின் கடைசி ஐந்து தினங்களை காலியாக விட்டிருந்தோம். காலியான இடங்களில் தம் பெயரைப் பதிவு செய்துகொள்ள வேண்டுமென்று நண்பர்களின் விண்ணப்பங்கள் உடனேயே வந்து குவிந்துவிட்டன. இதிலிருந்து தமிழ் கத்தோலிக்கரிடையே உள்ள பாப்பரசர் பற்றுதலை அறிய பெருமிதம் எய்துகிறோம். முதல் ஐந்து விண்ணப்பதாருக்கே செப்டம்பர் மாதத்தில் இடங்கொடுத்து;மற்றவர்களுக்கு அக்டோபர் மாதத்தில் நாள் குறித்திருக்கிறோம். **நவம்பர் டிசம்பர் மாதங்களில் இன்னும் காலியாக இருக்கின்றன.**

பாப்பரசரின் பூசைக் கடியாரம்பற்றி முழு விவரம் தெரிய விரும்புவோர் இவ்விதழில் ஆசிரியர் குறிப்பைப் பார்க்கவும்.

செப்டம்பர் மாதம் பாப்பரசருக்காக பூசைப்பலி நிறைவேற்றிவைக்க ஏற்றுக்கொண்டவர்கள்

| நாள் | பூசை செய்கிறவர்கள் அல்லது செய்விக்கிறவர்கள் |
|---|---|
| 26. | Seven Dolours Convent, Kamuthi. |
| 27. | Mr. A. Mathai, Rosary Church, Madurai. |
| 28. | Rev. Fr. M. Savarimuthu, Rosary Church, Madurai. |
| 29. | M. A. S. A. Morais, Colombo, Ceylon. |
| 30. | X. A. Fernando, Colombo, Ceylon. |

அக்டோபர் மாதம்

| | |
|---|---|
| 1. | T. A. Felix Fernando, Colombo, Ceylon.<br>The Boarders, De Britto High School, Devakottai. |
| 2. | F. J. Sebastian, No. 76 Jalan Semiliag, Dedong, Kedah, Malaya. |
| 3. | M. லூர்து, கோவங்குளம், கருத்தப்பிள்ளையூர் பங்கு. |
| 4. | M. Gnanapragasam, 5 Selvanathan Street, Chetput, Madras |
| 5. | L. Michael, Jeevanhally, Cox Town, Bangalore. |
| 6. | Inmates of St. Mary's, Madurai. |
| 7. | அர்ச். அமலோற்பவ மாதா மடம், சவேரியார் பட்டணம்.<br>Holy Rosary Church Girls' School, Madurai. |
| 8. | P. அந்தோனி, நசரேத்தெரு, விக்கிரமசிங்கபுரம். |
| 9. | T. M. ஆரோக்யசாமி & சன்ஸ், புஸ்தக வியாபாரம், ஆரோக்கிய மருந்து ஸ்டோர்ஸ், மார்க்கெட், ஒத்தகமந்து |

10. St. Aloysius Mid-School, Marthandanthurai, Primary Section II + III மாணவ மாணவிகள்
11. S. S. Doss Family, Beach Road, Negapatam.
12. { L. Michael, Jeevanhally, Cox Town, Bangalore.
T. சாமிநாதபிள்ளை, 27 கோயில் தெரு, பாலக்கரை, திருச்சி.
13. G. சவரிமுத்துப் பிள்ளை, ஜார்ஜ்புரம் தெரு, இருதயகுளம் பங்கு.
14. A. Maria Durairaj Pillai, Mercy Home, Kizhapalayam, Tenkasi
15. St. Mary's H. Ele. School, R. C. East Gate, Madurai
16. சற்பிரசாத சபை பிள்ளைகள், R. C. ஈஸ்ட் கேட், மதுரை.
17. பாலர் சபை பிள்ளைகள், R. C. ஈஸ்ட் கேட், மதுரை.
18. I D Holy Cross College High School, Trichy.
19. L. Michael, Jeevanhally, Cox Town, Bangalore.
20. T. சாமிநாதபிள்ளை, 27 கோயில் தெரு, பாலக்கரை, திருச்சி,
21. S. ஜோசப் ஜார்ஜ் பிள்ளை, அம்பாசமுத்திரம், வீரவனல்லூர் பங்கு.
22. புனித பத்திரிசியார் உயர்தரப் பாடசாலை, பழையகுசவபாளையம், [மதுரை.
23. N. செல்வராஜ், புனித சூசையப்பர் பேக்கரி, திரு இருதயப்பாடசாலை, இருதயகுளம்
24. Semi Boarders, St. Joseph's College, Trichy.
25. Mathias Family, Aminjikarai, Madras.
26. T. R. S. A. Sundaram Pillai, No. 333 Rue Savariappa, padayachi, Nellitope, Pondicherry.
27. கத்தோலிக்கு ஆசிரியர், திரு இருதயப் பாடசாலை, இருதயகுளம்.
28. Rev. Fr. A. M. Susai Manickam, St. Josph's, Dindigul
29. Mrs. Mathew Miranda, St. James Church, Manapad.
30. Rev. Fr. M. Savarimuthu, Rosary Church, Madurai.
31. Holy Family Convent, Gnanaolivupuram, Madurai.

---

## வாசகர் பேசுகிறார்கள்

அன்புமிக்க ஆசிரியத் தந்தையவர்களுக்கு எனது மனமார்ந்த வணக்கம்.

இம்மாதம் 8-9-'55ல் முடிவான வேளாங்கண்ணி மாதா திருவிழாவிற்கு ஏராளமான பக்தர்கள் வந்து மரியாயை மகிமைப்படுத்தி திரும்பியதாக கேள்விப்பட்டு உள்ளம் மகிழ்ச்சியடைகிறது. ஆனால் மற்றொரு காரியத்தை கேள்விப்படுகையில் உள்ளம் வேதனையால் கொந்தளிப்படைகிறது.

வேளாங்கண்ணி ஆலயங்களுக்கு போய் தங்கள் காணிக்கையை செலுத்திவரும் சிலர், அப்படியே நாகூருக்குபோய் முஸ்லீம் மசூதிக்கு சென்று பூ, ஊதுவத்தி, சர்க்கரை, வாங்கி முஸ்லீம் முறைப்படி பாத்தியா என்னும் சடங்கை நிறைவேற்றி காணிக்கை போட்டு பாத்தியா சடங்கை நிறைவேற்றிய பூவை வாங்கிப் போட காணிக்கை எட்டு அணா என கொடுத்து வரும் நம் கத்தோலிக்க கிறீஸ்துவர்களின் மனநிலை இப்படியாயிருக்கும்? இரு எஜமானின் உதவியும், தேவை என்ற முறையில் நடக்கிறார்களே! செவியால் கேட்கவும், கண்ணால் பார்க்கவும் கேவலமாயிருக்கிறது.

இதை செவியால் கேட்டு மனம் குமுறும், கத்தோலிக்க வீரன்.

சேத்பட் 10-9-'55 } **M. அமலதாஸ்** பெர்னண்டோ இல்லம்.

# ஒய். எம். சி. ஏ.

**— J. M. G. —**

ஒய். எம். சி. ஏ. வரலாறு என்ற தலைப்பில் "தமிழ் நாடு" ஆகஸ்டு 22-ம் நாள் இதழில் ஓர் அழகிய கட்டுரை வெளிவந்திருக்கிறது. இக்கட்டுரையை எழுத அது நம்மைத் தூண்டிற்று. பற்பல துறைகளில் சாதி மத பேதமின்றிப் பொது மக்களுக்கு அரிய சேவைகள் செய்துவரும் இத்தாபனத்தில், கத்தோலிக்க கிறிஸ்துவர்கள் அங்கத்தினராகச் சேரலாமா என்று பல சமயங்களில் பலர் கேட்டிருக்கின்றனர்.

ஒய். எம். சி. ஏ. மத சம்மந்தமான ஒரு ஸ்தாபனம். இதை முதன் முதல் தொடங்கிய ஜியார்ஜ் வில்லியத்தின் எண்ணம் என்ன? "**கிறிஸ்துவ அடிப்படையில்** கூட்டுதவியின்பேரில பரஸ்பர உதவியை ஏற்படுத்துவதே இந்த அமைப்பின் நோக்கமாகும்" என்றார் மேற்படி கட்டுரை ஆசிரியர். அவர் மேலும் வரைகிறார்: "இந்த அமைப்பின் தொடக்க காலத்தில் உறுப்பினர்களாக இருந்தவர்கள், இந்த உறுப்பினர்களிடையே **மதப்பற்றை வலுப்படுத்தி** வாழ்க்கையைச் சிறப்புறச் செய்து......சேவை செய்யும்படி செய்வதை நோக்கமாகக் கொண்டிருந்தனர்."

பென்ஸ் என்னும் ஒய், எம், சி. ஏ. டைரக்டர் ஒருவர் 1949-ல் வரைகிறார்: "ஒய். எம். சி. ஏ. வாலர்களின் தாபனம். **ஞான (ஆத்மார்த்த அல்லது மதத்துக் கடுத்த)** புத்தி, சமூக, உடலுக்கடுத்த தேவைகளைத் தீர்க்கும் கருத்தோடு ஏற்படுத்தப்பட்ட தாபனம். **பைபிள் படிப்பையும்** மத (மீட்டிங்) கூட்டங்களை வற்புறுத்தும் **மத வைராக்கியத்தை** ஊட்டுவதே அதன் சிலாக்கியம். ஆதியிலிருந்து **மத உணர்ச்சியே** இத்தாபனத்தின் முக்கியத்துவம். வாலர்களின் நன்மைக்காக செய்யப்படும் தொண்டெல்லாம் **மத உணர்ச்சியின்** அடையாளமே."

இவைகளை வாசித்தபின் ஒய். எம். சி. ஏ. மத சம்பந்தமான தாபனம் என்று திட்டமாய் விளங்குகிறதல்லவா? வேறொரு மதத்தின் கொள்கைகளை ஆதரிக்கும் கத்தோலிக்கன் தன் மதத்தின் உண்மைகளை உதறித்தள்ளுகிறான் அன்றோ. ஆதலால்தான் கத்தோலிக்கர் ஒய். எம். சி. ஏ.-யின் அங்கத்தினராக இருக்கலாகாது.

தற்காலம் புரோட்டஸ்டன்டு கொள்கைகளை அது போதிப்பதில்லை என்பீர்கள். 1869-ம் ஆண்டில் கூடிய அகில உலக ஒய். எம்.

சி. ஏ. மகாநாட்டில் சொன்னதாக 1951-ம் ஆண்டில் பிரசுரித்த சரிதையில் வாசிக்கக் கிடப்பதென்ன ? கொள்கையிலும் நடப்பிலும் கிறீஸ்துநாதரின் **சபையின் அவசியமான** ஒற்றுமையை ஒய். எம். சி. ஏ. அங்கீகரிக்கிறது. வெவ்வேறு சபைகளின் **பேர் என்னவானுலும் சரி** அவர்களுடைய **கொள்கைகள்** எத்தகையவாறுலும் சரி சேசுவை நேசித்து சுவிசேஷத்தின் பிரகாரம் அதன் தலைவரான சேசுவுக்கு மரியாதை காட்டுகிற யாவரையும் பட்சமாகவும் அன்பாகவும் ஏற்றுக் கொள்ளச் சொல்லுகிறது.''

மேற்சொன்னதிலிருந்து அறியக் கிடப்பதென்னவெனில் கிறீஸ்துவம் என்று சொல்லிக்கொள்வதெல்லாம் ஒன்றுதான். **எம்மதமும் சம்மதம்.** ஒவ்வொரு சபையிலும் இருக்கும் கொள்கைகளைப்பற்றி கவனிக்கவேண்டியதில்லை என்பதுதானே. ஆகலால் மதவிஷயத்தில் அலட்சியத்தை ஏற்படுத்துகின்றது. இதெல்லாம் திருச்சபையின் கொள்கைக்கு நேர் விரோதம் அல்லவா ? சேசுநாதர் ஒரே சபையை ஏற்படுத்தினர். அதுதான் கத்தோலிக்க சத்திய திருச்சபை என்பது நம் போதனை. எம்மதமும் சம்மதம் என்னும் மத விஷயத்தில் அலட்சிய கொள்கையும் பகுத்தறிவே நன் மதம் என்னும் பேத்தலும் திருச்சபைக்கு விரோதம் அல்லவா ?

ஆதலால்தான் கத்தோலிக்கக் கிறிஸ்துவன் ஒய். எம். சி. ஏ.-யில் அங்கத்தினன் ஆகக்கூடாது. திருச்சபையின் பெரிய அலுவலகம் (Holy Office) 1920-ம் ஆண்டு நவம்பர் மாதம் 5-ம் தேதி விடுத்த அறிக்கையில் ஒய். எம். சி. ஏ.-யைப்பற்றி கிறிஸ்துவர்கள் எச்சரிக்கையாயிருக்க வேண்டும் என்று சொன்னபின், விசுவாசிகள் அதில் சேராதபடி தடுக்கவேண்டும் என்று மேற்றிராணிமார்களைக் கேட்டிருக்கிறது.

கத்தோலிக்கன் ஒய். எம். சி. ஏ.-யில் செயல் ஆளனுகவோ சாதாரண அங்கத்தினனுகவோ சேரலாகாது. வாலிபர்கள் மன்றம் (Youth Camp) என்பதிலும் நம் இளைஞர்கள் சேரலாகாது. ஆனுல் உடற்பயிற்சி கல்லூரிகளில் (உயர்தரப் பாடசாலை போதனுமுறைப் பாடசாலை, கல்லூரிகள் போன்ற கல்விச் சாலைகளில் அல்ல) சேர்ந்து உடற்பயிற்சி பெறலாம். அது நடத்தும் உணவு விடுதிகளிலும் இருக்கலாம். உணவு விடுதிகள் எந்த ஹோட்டலிலாவது சாப்பிடப் போகுமுன் ஹோட்டல் முதலாளி என்ன மதத்தான் என்று விசாரித்துக்கொண்டா போகிறோம் ?

எனினும் மதுரை அதிமேற்றிராணியார் மற்றும் நம் மேற்றிராணிமார்களின் திட்டம் என்னவெனில் உடற்பயிற்சிசாலை, தாபனங்கள், உணவு விடுதிகளில் சேருமுன்னுல் கத்தோலிக்கர்கள் மேற்றிராணியாரிடம் இருந்து எழுத்து மூலமாய் உத்தரவு பெறவேண்டும்.

# "குழந்தைகளை என்னிடம் வரவிடுங்கள்"

மாற்கு. 10 ; 14.

[ சி. முடியப்பர் சே, ச. ]

நமதாண்டவர் போதித்துக் கொண்டிருந்தபோது, அவர் உள்ளத்தை நன்கறிந்த சில தாய்மார் தங்கள் குழந்தைகளை அவர் ஆசீர்வதிக்கும்படி அவரிடம் கொணர்ந்தனர். குழந்தைகள் சற்றும் பயமின்றி தங்கள் பொக்கை வாய்களைத் திறந்து கைகளை நீட்டி, அவரை நோக்கி ''தத்தக்க பித்தக்கவென'' தீவரித்தனர். அவரிடம் இருந்த ஏதோ அவர்கள் நான் முன் நீ முன் என்று ஓட வைத்தது. என்ன அலுவலாய் இருந்தாலும் சேசுவுக்குச் சிறுவரைக் கண்டால் பிரியந்தான். ஓரளவு அவரைப்போல் அவர்களும் தூய்மை உள்ளவர்கள் அல்லவா ?

ஆனுல் சீஷர்கள் அவர்களை அதட்டி விரட்டப் பார்த்தார்கள்; உட்கார்ந்திருந்த ஆண்டவர் பாதி எழுந்தவாறு தன் அப்போஸ்தலரைத் தடுத்ததுமன்றி, சைகை காட்டிப் பாலர்களைத் தன்னிடம் அழைத்தார். அந்நேரம் அவர் வதனத்தில் என்ன சாந்தம் ! அவர் இருதயத்தில் என்ன உவகை !



தில்லு முல்லு நிறைந்த பரிசேயரோடும் தன்னலம் பேணிய மற்றவரோடும் புழங்கி வந்த ஆண்டவர் இம்மாசற்றக் குழந்தைகளைக் கண்டதே அவர் இருதயத்துக்கு ஒரு விருந்தாயிருக்கவேண்டும். அவர்களையா அவகாசமில்லையென்று அவர் அனுப்பிவிடுவார்?

சீஷர்களின் நடத்தை அவரை விசனப்படுத்தினது : அவர்களைக் கடிந்து, பரலோக இராட்சியம் சிறுவருக்குத்தான் என்று இடித்துக் கூறினர். "அவர்களைப் போல் நீங்களும் ஆகாவிடில் உங்களுக்கு மோட்ச இராட்சியம்

கிடையாது" என்றார். இன்னும் சில மாதங்களுக்குப் பின்னர் அப்போஸ்தலருள் பரலோகத்தில் நான் பெரியவன் நீ பெரியவன் என்று தர்க்கம் நடந்தபோதும், அவர்கள் சிலாக்கியத்தைச் சிதறடித்து "நீங்கள் இச்சிறுவனைப் போல் ஆனால் தவிர மோட்சத்தில் பிரவேசிக்கவே மாட்டீர்கள்" என்று ஒரு போடு போட்டார். பாலர்களைத் தன்னிடம் அழைத்து, அவர்களை அணைத்துக் கொள்கிறார். அவர்கள் தங்கள் பிஞ்சுக் கரங்களால் தன்னைத் தொட்டுப் பார்க்க விடுகிறார். தன் மடிமேல் ஒருவர் இருவரைத் தூக்கிவைத்துக் கொள்கிறார். அவர்களுக்கு இடறலாய் இருப்பவர்களை, அவர்கள் கழுத்தில் ஒரு கல்லைக்கட்டி சமுத்திரத்தில் தாழ்த்திவிடுவது மேல் என்கிறார்.

நமது குடும்பங்களில் சிறுவர் சிறுமிகள் உண்டு. அவர்களுக்கு இடறலாயிருப்பது சேசுவின் இருதயத்துக்கு என்ன வருத்தம் விளைவிக்கிறது! பேசச் சக்தியற்றவர்கள்தான் குழந்தைகள்; ஆனால் பார்க்கிறார்கள், கேட்கிறார்கள். பார்ப்பவை கேட்பவை அவர்கள் இளமனதில் பசுமரத்தாணிபோல் பதிந்து தங்கிவிடுகின்றன. தங்கள் பிள்ளைகள் தகாத வார்த்தை சொல்லுகிறார்கள் என்றும், மற்றவர் தலைமுடியைப் பிடித்து இழுக்கிறார்களென்றும், கையிலகப்பட்டதை யார் என்று பாராமல் எறிகிறார்கள் என்றும், பெற்றோர் முறையிடுவது உண்டு. அநேகமாய் அதற்குக் காரணம் அவர்கள் சிசுக்களாயிருந்தபோது பெற்றோரும் மற்றோரும் காட்டிய துர்மாதிரிகைதான். அதற்கு மாறாக நல்ல குடும்பத்துப் பிள்ளைகளிடம் உள்ள நற்குணங்களுக்கு அவர்கள் தத்தம் குடும்பத்தில் கண்ட நன்மாதிரிகையே காரணம். அர்ச். குரேதார்ஸின் தாய் அவர் பாலனாய் இருந்தபோதே அவர் கையைப் பிடித்து அவருக்குச் சிலுவை வரைந்த பிறகுதான் அன்னம் ஊட்டுவாளாம். நம்நாட்டில் எத்தனை தாய்மார் இப்படிச் செய்வது! குழந்தை தெரேசம்மாளின் தாய், சிறுமியாய் அவள் இருந்தபோது, தன்னோடு அவளையும் கோவிலுக்குக் கூட்டிப் போய், தன் பக்கத்தில் பிள்ளையை வைத்துக் கொண்டு தன்னைப் போல் கைகுவித்துச் செபம் பண்ணப் பழக்குவாளாம். பிற்காலத்தில் நற்கருணை மட்டில் உருக்கமான பக்திகொண்டிருந்த அர்ச். பயலனை குழந்தைப் பருவத்தில் அவர் தாய் கோவிலுக்கு அழைத்துப் போய், நற்கருணைப் பேழையைக் காட்டி "அந்தா சின்ன சேசு" என்று ஆண்டவரை அச்சிசு விசுவசித்துக் காண அவரைப் பயிற்சித்தாளாம்.

பிள்ளைகளைப் பக்தியுள்ளவர்களாய்ப் பழக்குவது பெற்றோரின் பளுவான கடமை. அவர்கள் கோலிவிடும் அஸ்திவாரத்தின் பேரில் பள்ளிக்கூட அதிகாரிகளும் குருக்களும் கன்னியரும் கட்டமுடியும். பாலியப் பருவத்திலேயே பிள்ளைகளின் மனது சேசுவினிடம் போகப்பழக்கும் தாய்தந்தையரின் ஆனந்தமாய் பிற்காலத்தில் இருப்பார்கள் அப்பிள்ளைகள்.

# என் மாற்றம்

A. K.

வோவா ஒரு ருஷிய கம்யூனிஸ்டு வாலிபன். கட்சியில் ஆர்வங் கொண்டவன். தோழர்கள் கற்றுக் கொடுத்த சொற்பொழிவுகளை சமயம் வாய்த்தபோது ஒப்பிக்க வேண்டியவன். ஆலயம் செல்கிறவர்களை பரிகசித்து, நாத்திக பிரச்சாரம் செய்து வந்தான். உலோகாதாயக் கொள்கைகளை ஊக்கத்துடன் படித்தான். உலக முழுவதும் பொதுவுடைமை நிறுவினாலொழிய மனிதனின் சிக்கல்கள் ஒழியாது; சுபிட்சமாய் அவன் வாழ முடியாது என்று கட்சியில் பூரண நம்பிக்கை கொண்டிருந்தான்; அதற்காக அயராது பாடுபட்டு வந்தான்.

வோவாவுக்கு கலியாண பிராயமான போதுதான் அவன் கண் திறந்தது. சமீபகாலம் வரை மக்களிடையே அவனறிய விவாகரத்து, சர்வசாதாரணமாயிருந்தது. ஒருவன் தன் இஷ்டத்துக்கு யாருடனும் பழகலாம், வாழலாம். மனமிருந்தால் வாழ்க்கைப்பட்ட மனைவியோடு வாழலாம்; மனமில்லாவிட்டால் மணமுறிவு பெற்றுக் கொள்ளலாம். இதுதான் அவன் இதுவரையில் கட்சியில் கற்று வந்த பாடம்.

ஆனால் இப்போது கட்சித் தலைவர்கள் காதல், கலியாணம் விஷயங்களில் கொள்கைகளை மாற்றிப் போதித்தார்கள். மனைவி வாழ்க்கைத் துணைவி; எனவே வாழ் நாள் முழுவதும் இருவரும் பரஸ்பர சிநேகத்துடன் ஒத்து நிரந்திரமாய் வாழ்வதுதான் மேல் என்று கற்பித்தார்கள்.

வோவாவுக்கு இம்மாற்றம் மிக வியப்பைக் கொடுத்தது. தனக்குள் அவன் சிந்திக்கலானான்: 'என்ன! நமது தலைவர்கள் திருமணம் என்னும் ஒரு முக்கிய விஷயத்தில் இது வரையிலும் தப்பிதமாய் போதித்தார்களா? இல்லாவிட்டால், அவர்கள் எதற்காக நமது பாட்டன் பாட்டி காலத்து பழைய கொள்கையை மறுபடியும் புது மெருகுடன் பிரச்சாரம் செய்கிறார்கள்? இவ் விஷயத்தில் தப்பிதம் செய்த நமது தலைவர்கள் ஏன் மற்ற காரியங்களிலும் தவறி இருக்கமுடியாது? கடவுளைப் பற்றி அவர்கள் போதிப்பது ஒரு வேளை தப்பிதமோ என்னமோ?' என்று கலக்கமுற்றான் கம்யூனிஸ்டு தோழன் வோவா.

மனநிம்மதியை இழந்தான். தன் சந்தேகத்தைப் பற்றி தன் ஆருயிர் தோழர்களிடம் தர்க்கித்தான். இவர்கள் சேர்ந்து ஒரு இரகசிய குழு நிறுவினார்கள். கட்சி சம்பந்தமில்லா பற்பல புத்தகங்களை திருட்டுத்தனமாய் வாங்கி வாசித்தார்கள். வோவாவிடம் ஒரு நாத்திக நண்பன் ஒரு கைப்பிரதியைக் கொடுத்தான். இதை மறைத்து வைத்திருந்து, இரவு நேரத்தில் வீட்டை அடைத்துக் கொண்டு வாசித்தான். என்ன அருமை! என்ன கவர்ச்சி! உணர்ச்சி வெள்ளத்தில் மூழ்கினான். புரட்சி எண்ணங்கள் அவனையும் மீறி எழும்பின. "இது வரையில் கிறீஸ்து

வைப்பற்றி கட்சியில் கேள்விப் பட்டிருக்கிறேன். ஆனால் இந்தக் கைப்பிரதியில் அர்ச். லூக்காஸ் வரைந்துள்ளதுபோலல்லவே! (அவனிடம் கிடைத்தது அர்ச். லூக்காஸ் எழுதிய சுவிசேஷம்). கிறீஸ்து பாட்டாளி மக்களின் உரிமைகளைப் பறிக்க முதலாளிகள் உருவாக்கி உபயோகித்து வரும் ஒரு வாலிபனென்றல்லவா எங்களுக்கு போதித்தார்கள் எங்கள் தலைவர்கள். ஆனால் கிறீஸ்து எவ்வளவு நல்லவர்! ஓர் எளியவர்! ஏழைகளின் நண்பர்! சேசுவின் தாய் சொல்லிய வார்த்தைகள் எத்தனை ஆறுதலளிக்கின்றன! "வல்லபமுடைத்தானவர்களை ஆசனத்திலே நின்று தள்ளி, தாழ்ந்தவர்களை உயர்த்தினார். பசித்திருக்கிறவர்களை நன்மைகளினால் நிரப்பித் தனவான்களை வெறுமையாய் அனுப்பிவிட்டார்." (லூக். 1:52)

ஆ! என் கட்சித் தலைவர்கள் கிறீஸ்து சம்பந்தப்பட்டவரை என்னை ஏமாற்றி விட்டார்கள். எத்தனையோ பொய் பிரச்சாரம் செய்து வந்திருக்கிறார்கள்! அவர் காட்டும் அன்புவழி இவர்கள் காட்டும் கொடிய வழிக்கு எத்தனையோ மேலானது. இனி நான் கிறீஸ்துவைத்தான் பின்பற்றுவேன்; அன்பு வழியைத்தான் நாடுவேன் என தீர்மானித்தான்.

வோவா தன் நண்பர்கள் சிலருக்கு இப்பிரதியைக் கொடுத்தான். இரகசிய 'செல்' தொடங்கி, கிறீஸ்துவின் சத்தியங்களை படித்தும், பரப்பியும் ஆர்வங் காட்டி வந்தான்.



# இனிகோவை அர்ச். இஞ்ஞாசியாராக உருவாக்கிய எண்ணங்கள்

## II

லொயோலா மாளிகையில் படுத்துக்கிடந்த நாட்களில் கடவுளுக்காக மாத்திரம் தான் இனி உயிர்வாழப் போவதாக இனிகோ தன் மனத்தில் சங்கற்பித்துக் கொண்டார். உலக சம்பவங்களின் சூழற்சியில் தேவனின் சித்தமே தன் வாழ்க்கையின் இலட்சியமாய் இருக்கத்தகும் என்பது அவரிடம் அசைக்க முடியாத ஒரு தீர்மானமாகிவிட்டது. படைக்கப்பட்டவைகள் தனக்குத் திருப்திதர ஏலாதவை ஆதலால், அவைமாட்டு இருதயச் சார்பு நாடுவது ஒழுங்கீனம். காசுபணமோ தரித்திரமோ, சரீர சுகமோ நோயோ, நீண்ட காலம் வாழ்வதோ சீக்கிரம் மரிப்பதோ, மாந்தரின் புகழ்ச்சியோ இகழ்ச்சியோ யாவும் தனக்கு ஒன்றுதான் என்று நடுநிலைக்கு அவர் தம் மனத்தை வலுவந்தம் செய்து பதப்படுத்திவிட்டார். எந்தக் காரியமாயினும் அவர் உள்ளத்தை தன்பால் இயக்கவோ இழுக்கவோ முடியாத வண்ணம் அதில் கடவுள் சித்தத்துக்காக நான் இருக்கிறேன் என்னும் உட்கிடக்கை வைரம் எனப் பாய்ந்திருந்தது. சிருஷ்டிகள் மட்டில் பற்றற்ற இந்நிலைமையை அவர் சொற்பக் காலத்தில் எய்திவிட்டார்.

இத்தகைய பண்பில்தான் ஆதாம் ஏவாள் பாவம் கட்டிக் கொள்வதற்கு முன் இருந்தனர். அர்ச். இஞ்ஞாசியார் வாழ்க்கையின் சிகரமே இப்புண்ணியமென்கலாம். தனக்கு மரணம் அடுத்திருந்ததை நன்கறிந்த அவர் பரிசுத்த பாப்புவின் ஆசீரைப் பெற்று வரும்படி தன் காரியதரிசியிடம் கேட்டார். இவரோ அர்ச்சியசிஷ்டவரின் நிலைமை அவ்வளவு மோசமில்லையென்று வைத்தியர் கூறியதால் பார்த்துக்கொள்ளலாமென்று வாளாவிருந்து விட்டார். வியாதியஸ்தரோ அவரைத் துரிதப்படுத்தவில்லை. கடவுள் சித்தமென்று இருந்தார். அடுத்த இரவில் நோயின் கடுமை அதிகரிக்க, மறுநாள் காலை காரியதரிசி பாப்புவிடம் விரைந்து சென்று ஆசீரைப் பெற்றுத் திரும்பு முன் இஞ்ஞாசியார் பரகதி எய்திவிட்டார்.

இத்தகைய புண்ணியப்பண்பு விடாமுயற்சியின் பயன். சென்மப் பாவத்தின் விளைவாயும் நமது குற்றங்களின் காரணத்தாலும், மாந்தரின் ஆத்துமத்துக்கு கடவுள் கொடுத்திருந்த நேர்மையான நாட்டம் பலவீனப்பட்டு சரீர சொகுசும் மற்றோரின் மதிப்பும் வேண்டுமென்னும் அடங்காத்தினவு அவர்களைச் சதா மேற்கொண்டிருக்கிறது. இந்நாட்டத்தை அடக்குவதே அறம்.

பிற்காலத்தில் அர்ச். இஞ்ஞாசியார் சலியாது போதித்து வந்ததை, தானே அனுசரித்தார். "முன்னேற்றத்தின் அளவு முகமலர்ச்சியிலாவது சுபாவச் சூட்டிக்கையிலாவது அல்ல; ஆனால் தனக்குத் தானே வலுவந்தம் செய்து கொள்வதில் அடங்கியிருக்கிறது." எதிலும் ஒழுங்கீனமின்றி நாம் தேர்ந்து கொள்வதுக்கு

அவசியமான சாதனம் நமது உள்ளம் இப்பால் அப்பால் நகராது ஒரு திராசின் கோலைப் போல நடுநிலையாயிருப்பதாகும். ஆகையால் தன் மக்களிடையே தன்னைத்தானே அடக்கும் குணம் குறிப்பாய் விளங்கவேண்டும் என்று அர்ச். இஞ்ஞாசியார் வலியுறுத்தி வந்தார். திரிதேந்து சங்கத்துக்கு அனுப்பியவர்களிடம் விசேஷ சாஸ்திரப் புலமைதேவையாயிருந்தது. மற்றப்படி எந்த அலுவலுக்கும் நியமிக்கப்படும் தன் மக்களிடம் அகப்பற்றின்றி தன்னை மறுதலிக்கும் அப்பியாசத்தையே அவர் ஆசித்தார். இது இருப்பில், கடவுளின் உதவியும் இருக்கும் என்பது அவரது அசையா நம்பிக்கை. இயற்கை நாட்டத்துக்கு மசியாது தங்கள் மனது அதற்கு நேர்மாருய் நடக்கச் செய்ய சேசு சபையார் பயிலவேண்டுமென்பது அவர் அபிலாசை. இனிகோவை புனிதராக்கிய எண்ணங்களில் "உன்னைத் தானே அடக்கு" என்பது பிரதானமான ஒன்று என்பதில் ஐயமில்லை.







# ஜெப அப்போஸ்தல சபை ஒப்புக்கொடுத்தல்

**D. J.**

*ஒரு கிறீஸ்துவனுடைய ஜீவியம் சர்வேசுரனுக்கு உகந்த பலியாக இருக்கவேண்டும். ஞானஸ்நானத்தில் நாம் சர்வேசுரனுக்கு ரம்மியமான பலி ஒப்புக்கொடுக்க அழைக்கப்பட்டிருக்கிறோம். சேசுக்கிறிஸ்துவை பலி பூசையில் நாம் ஒப்புக்கொடுக்கிறோம். இதுவே சர்வேசுரனுடைய மாட்சிக்கு ஏற்ற பலி, மனிதர்களை இரட்சிக்கவல்ல பலி. ஒவ்வொரு கிறிஸ்தவனுடைய ஜீவியமும் சர்வேசுரனுக்கு உகந்த பலியாக வேண்டுமானால் பலிப் பொருள் சேசுக்கிறிஸ்துவிலும், சேசுக்கிறிஸ்துவோடும் ஒன்று சேர்ந்து சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கப்பட வேண்டும். நமது வாழ்க்கையின் ஒவ்வொரு கிரியையும் இவ்வாறு சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டால் வாழ்க்கையே பலியாய் விடுகிறதல்லவா !*

*ஜெப அப்போஸ்தல சபையில் தினசரி நமது காணிக்கைகளை எல்லாம் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கிறோம். சேசுநாதருடைய பலியோடு சேர்ந்து அவைகளை ஒப்புக்கொடுக்கிறோம். ஆதலால் நமது வாழ்க்கை முழுவதுமே ஒரு பலியாவது உண்மை. நம்முடைய கிரியை ஒவ்வொன்றினுலும் சர்வேசுரனுடைய மகிமைக்கு ஒத்த தேவாராதனை சமர்ப்பிக்கப்படுகிறது. நமது பாவங்களினல் தேவ மகத்துவத்துக்கு நேர்ந்த நிந்தைக்குப் பரிகாரம் செய்யப்படுகிறது. அவருடைய அருளும் தயாளமும் மன்ருடப்படுகிறது. அவரிடமிருந்து பெற்ற நன்மைகளுக்கு நன்றியும் அளிக்கப்படுகிறது.*

*நமது தினசரி வாழ்வில் வருத்தம் கலந்திருப்பது சகஜம். வருத்தத்தைக் கண்டால் நாம் சோர்வடைவதற்குப் பதிலாக அது நமக்குப் புதிய ஊக்கம் அளிக்கவேண்டும். ஏனெனில் நமது வாழ்க்கையில் சேசுவின் பலியோடு அதிக உறவு கொண்டவை நம்முடைய வருத்தங்களே. சேசுவின் சிலுவைப் பலி எவ்வளவு வேதனை நிறைந்திருந்தது! ஆகவே நம்முடைய வருத்தங்களை, நாம் சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுக்கும் போது, சர்வேசுரன் அன்பு கனிந்த உள்ளத்துடன் அவைகளை ஏற்றுக்கொள்ளுவார் என்று ஆறுதல் அடைகிறோம். ஏனெனில் அவைகளில் பிதா தமது நேச குமாரனின் சிலுவைப் பலியின் சாயலைக் காண்கிருர்.*

கிறிஸ்தவ வாழ்க்கையே கடினமானது என்று சிலர் எண்ணலாம். நமது கடமைகள் சில கடினமானவை. ஞாயிறு பூசை காண்பது கடினம். என் சகோதரன் எனக்குச் செய்த துரோகத்தை மன்னிப்பது கடினம். மற்றவர்களுடைய குற்றங்களைப் பற்றி பேசாதிருத்தல் கடினம். எனது வறுமை ஒரு சிலுவை. வியாதி, எதிர்பாராத நஷ்டம், குடும்பத்தில் ஒரு மரணம், பிள்ளை தறுதலையாக வளருவதைப் பார்ப்பது—எல்லாம் சிலுவைகள்தான். ஆனால் இவைகளை ஏற்று, சர்வேசுரனுக்கு ஒப்புக்கொடுப்பதால் என்ன உன்னத பொருளாக மாறுகின்றன. சர்வேசுரனுக்கு ரம்மியமானவையாகின்றன. நமக்கு எவ்வளவு ஆறுதல் அளிக்கின்றன !

---






### அட்டைப் படம்

இவ்வருட விசுவாசப் பரம்புதல் இயக்கம் பம்பாயில் மரமரியின் மகா சங்கத்தின் விளைவாக இந்தியா முழுவதும் நடந்த ஜெபமாலை இயக்கத்துடன் இணைந்துள்ளது. ஒவ்வொரு குடும்பத்திலும் ஜெபமாலை சொல்வதென்று வாக்குக் கொடுத்துள்ளோம். அந்த ஜெபமாலையை விசுவாசப் பரம்புதலுக்காக ஒப்புக்கொடுப்பது சாலச் சிறந்தது.

மேலும் தேவனின் சித்தம் மனுக்குலத்தின் இரட்சண்யம். ஏக திருத்துவத்தின் நோக்கம் இதுவே. "சர்வேசுரன் உலகத்தை எவ்வளவாக நேசித்தாரென்றால் தம்முடைய ஏக சுதனைத் தந்து, அவர்மேல் விசுவாசமாயிருக்கிற எவனும் கெட்டுப்போகாமல் நித்திய சீவனை அடையும்படி அருளியிருக்கிறார்" (அருளப்பர் 3 : 16.) நம் திவ்விய சேசுவின் சிலுவைப் பலிதான் செந்நிழலினால் மனுக்குலத்தின் மீட்புக்காக மக்களை ஏவித் தூண்டுகின்றது. திருச் சிலுவையின் ஞாபகம் நம் மனதில் ஆத்தும இரட்சண்ய வேகத்தை ஊட்டி வைக்கும்.

இத்தீயைக் கொழுந்துவிட்டு எரியச் செய்வது திருச் செபமாலையே. உலகையே தன் ஜெபத்தினால் தூய்மைப்படுத்தி, சமாதான பாதையில் தேவனிடம் கொண்டுவந்து சேர்ப்பது ஜெபமாலையே. இதுவே பாத்திமா மாதாவின் சுபசெய்தி. ஒவ்வொரு ஜெபமாலை மணியும் நம் மனதில் அன்பையும், விசுவாசப்பரம்புதலின் ஆர்வத்தையும், தியாகத்தையும் தாராள மனதையும் நன்மை புரியும் வரத்தையும் மாதாவிடமிருந்து நமக்குப் பெற்றுத்தரும்.

விசுவாசப்பரம்புதலில் நமது ஊக்கத்தை வெளிப்படையாக காட்டவல்ல உன்னத தினமாக 23—10—1955-ஐ பாப்பரசர் தாமே குறித்திருக்கிறார். அடியிலிருக்கும் மும்மகுடம் பொருந்திய சின்னம் இவ்விசுவாச பரம்புதல் இயக்கம் பாப்பரசரின் சொந்த இயக்கம் என்று சாட்சி சொல்லுகின்றது.

### பாப்பரசர் பக்தியும் தூதன் சேவையும்

கடந்த மூன்றாண்டுகளாக திரு இருதயத் தூதனில் "பாப்பரசரின் பூசைக் கடியாரம்" என்ற பகுதி பிரசுரமாகின்றது. "பாப்பரசரின் பூசைக் கடியாரம்" என்பது பாப்பரசரின் கருத்துக்காக ஜெப அப்போஸ்தல சபையார் இடைவிடாமல் பூசை செய்து ஒப்புக்கொடுப்பதற்கான முயற்சியாகும். நமது தமிழ் நாட்டில் தினந்தோறும் ஒரு பூசைப் பலியாவது பாப்பானவருக்காக ஒப்புக்கொடுக்க முயலுவதே நம்முடைய குறிக்

கோள். தினந்தோறும், நாள் தவறாமல், இந்தக் கருத்துக்காக பூசை செய்விப்பதே இவ்வியக்கத்தின் தனிச் சிறப்பு. ஆகையால் எல்லோரும் ஒரே நாளில் பூசை வைத்துவிட்டு மற்ற நாட்களை வெறுமனே விட்டுவிடாதபடிக்கு முன் ஏற்பாடும் ஒத்துழைப்பும் தேவை. இந்த முன் ஏற்பாட்டிற்கும் ஒத்துழைப்புக்கும்தான் தூதன் தன் சேவையை நல்கி, வரிசையாக ஒவ்வொருவரும் பூசை செய்து வைக்கவேண்டிய நாளைத் தெரிவிக்கிறான்.

இவ்வியக்கத்தில் சேர விரும்புகிறவர்கள் "திரு இருதயத் தூதன்" காரியாலயத்திற்கு எழுதவேண்டும். தூதனின் பாப்பரசரின் பூசைக் கடியாரத்தில் உங்களுக்கு குறிக்கப்பட்ட நாளில் பூசை செய்ய வேண்டும் அல்லது செய்விக்க வேண்டும். நமது மேற்றிராணிமார்களும் குருக்களும் இவ்வியக்கத்தை ஆசீர்வதித்து இதில் சேர்ந்து நமது பொதுத் தந்தையாகிய பாப்பரசருக்காக பலி நிறைவேற்றி வருகிறார்கள். நீங்களும் அவர்களோடு சேர்ந்து பூசைக் கடியாரம் தொடர்ச்சியாக ஓடும்படி செய்ய வேண்டுமென்று விரும்புகிறோம்.

பூசைக்கு என்று பணம் "திரு இருதய தூதன் காரியாலயத்திற்கு" அனுப்பவேண்டாம். பூசை உங்கள் ஊரில் தானே அல்லது வேறு சௌகரியப்பட்ட இடத்தில் செய்து வைக்க ஏற்பாடு செய்துகொள்ளுங்கள். இந்த கருத்துக்காக பூசை செய்விக்க உள்ள எண்ணத்தையும், நீங்கள் விரும்பும் நாளையும் அல்லது உங்களுக்கு குறிக்கப்படும் நாளை ஏற்றுக் கொள்ள தயார் என்பதையும் திரு இருதய தூதனுக்கு தெரியப்படுத்தினாலே போதும்.





# கத்தோலிக்கு உலகம்

**நமது பாப்பரசர் கிரீக் பிரிவினைக்காரருக்கு கடிதம்:** ரோமாபுரி அருகேயிருக்கும் ஒரு கிரீக் கத்தோலிக்க மடத்திலுள்ள துறவிகளுக்கு பாப்பரசர் தன் கைப்பட ஒரு கடிதம் எழுதி, அதில் கிரீக்கு பிரிவினையிலுள்ளவர்கள் மறுபடியும் ஒரே தாயாகிய சத்திய கத்தோலிக்க திருச்சபைக்கு வந்து சேரும்படி மன்றாடிக் கேட்கிறார். கிரீக்கு பிரிவினையிலுள்ளவர்கள் கத்தோலிக்கு ஒற்றுமைக்குத் திரும்புவார்களேயாகில் அதனால் அவர்கள் யாதொரு நஷ்டமும் அடைய மாட்டார்கள். அதற்கு மாறாக அவர்கள் போற்றிவரும் சடங்கு முறைகள், பக்திக் கிருத்தியங்கள் யாவும் பாதுகாக்கப்படும். திருச்சபையின் ஒற்றுமையினால் அவை புதுமெருகு பெற்றுத் துலங்கும், என்று பாப்பரசர் கூறினார்.

**பிள்ளைகளைப் பாதுகாக்கும்படி தாய்மார்களுக்குப் போதனை:** பெல்ஜிய தேசத்து பெண்பிள்ளைகளின் திருயாத்திரைக் கூட்டம் ஒன்று பாப்பரசரைப் பேட்டிகண்டபோது, கெடுதலான பிரசுரங்கள், சினிமா, டெலிவிஷன், ரேடியோ இவை விளைவிக்கும் தீங்கிலிருந்து தங்கள் குழந்தைகளைப் பாதுகாக்க தற்காலத்துத் தாய்மார் கற்றுக்கொள்ளவேண்டியது அவசியம் என்று பாப்பரசர் கூறினார்.

**சரித்திராசிரியர்களுக்குப் பேட்டி:** சமீபத்தில் ரோமாபுரியில் நடந்த அகில உலக சரித்திராசிரியர் மகாநாட்டிற்கு வந்த பிரதிநிதிகளுக்கு பாப்பரசர் பேட்டியளித்து சொற்பொழிவாற்றினார். இந்த பேட்டிக்கு, ரஷ்யாவிலிருந்தும், இரும்புத்திரை நாடுகளிலிருந்தும் வந்த பிரதிநிதிகள் செல்லவில்லை.

**இல்லறவாசிகள் இருவருக்கு முத்திப்பேறு பட்டம்:** அர்ச். வின்சென்ட் தே பவுல் சபையைத் தொடங்கின பிரடரிக் ஒசானும் என்னும் ஆசிரியருக்கு முத்திப்பேறு பட்டம் கொடுக்க ஆயத்த முயற்சிகள் எடுக்கலாமென்று திருச்சபை அனுமதி அளித்திருக்கிறது.

சமூகப் பிரச்னைகளைப் பற்றி ஆராய்ச்சிசெய்து 13-ம் சிங்கராயருக்கு உதவிபுரிந்த ரோசிரியர் ஜோசப் டோனியோலோ என்பவருக்கு முத்திப்பேறு பட்டம் கொடுக்க ஆயத்த ஏற்பாடுகள் நடக்கின்றன. இவர் சமூக சாஸ்திர ஆசிரியராயிருந்து 1918-ம் ஆண்டு தனது 73 வது வயதில் இத்தாலியில் மரித்தார்.

**இங்கிலாந்தில் மனந்திரும்புதல்:** இங்கிலாந்தில் சமீபகாலத்தில் மனந்திரும்பினவர்களில் முக்கியமானவர், எடித் சிட்வெல் என்னும் மாது. இவர் ஒரு பிரபல எழுத்தாளர். ஒரு முக்கியமான ஆங்கிலிக்கன் கோவில் தலைமைப் போதகரான பாட்ரிக் ஜான் எப்பர்ன்—ஸ்காட் என்பவரும் அவருடைய பாரியாளும் திருச்சபையில் சேர்ந்தனர். இவர்கள் சில ஆண்டுகளுக்கு முன் இந்தியாவில் ஆங்கிலிக்கன் மிஷனரிகளாயிருந்தனர்.

**ரஷ்யாவில் மதப் பிரசாரம்:** குழந்தை சேசுவின் தெரசம்மாள் சுயசரிதை ரஷ்ய பாஷையில் மொழிபெயர்க்கப்பட்டு ரஷ்ய எல்லை நாடுகளில் பரப்பப்பட்டு வருகிறது. சமயம் கிடைக்கும்போது நாட்டின் உள்ளேயும் எடுத்துச் செல்லப்படுகிறது. இப்பொழுது 10-ம் பத்திநாதரின் ஞானோபதேசமும் ரஷ்ய பாஷையில் பிரசுரிக்கப்பட்டுத் தயாராயிருக்கிறது. ரஷ்ய மொழி கற்ற அநேக வேதபோதகர் ரஷ்யாவுக்குள் சென்று மதம் போதிக்க தயாராகி வருகின்றனர்.

**பர்மா பிரதமர்:** பர்மா பிரதமர் ஊ நு கத்தோலிக்கர் மீது அநுதாபமுள்ளவர் என்பது யாவரும் அறிவர். அவர் சமீபத்தில் ஒரு கத்தோ

லிக்க கோவில் கட்டுவதற்கு 1000 டாலர் நன்கொடை அளித்தார். இதை ஒரு சர்க்கார் உத்தியோகஸ்தர் கொடுக்கும்போது, பர்மா ஒரு புத்த நாடான போதிலும், அரசியல் சட்டம் யாவருக்கும் மத சுதந்தரம் அளிக்கிறது என்று கூறினார்.

**திருவனந்தபுரம் உதவி மேற்றிராணியார் :** திருவனந்தபுரம் லத்தீன் மேற்றிராணியாருக்கு உதவியாக, வந். பீட்டர் பெர்னார்து பெரெய்ரா ஆண்டவர் அவர்கள் ஆகஸ்டு 24-ம் தேதி மேற்றிராணியார் அபிஷேகம் பெற்றார்கள். திருவனந்தபுரம் மேற்றிராணியார் அபிஷேகச் சடங்கை நிறைவேற்ற, கோட்டாறு மேற்றிராணியாரும், விஜயப்புரம் மேற்ராணியாரும் அவருக்கு உதவியாக இருந்தனர்.

**உயர்திரு. மரியதாஸ் ரெத்தினசாமி அவர்கள் :** ஆஸ்திரேலியாவில் நடந்த பசிபிக் நாடுகளின் கத்தோலிக்க சமூக மகாநாட்டிற்கு இந்தியாவின் பிரதிநிதியாகச் சென்றிருந்த திரு. ரெத்தினசாமி அவர்கள், மலேயா, சிங்கப்பூர் முதலிய இடங்களுக்குச் சென்று சென்ற மாதம் இந்தியா திரும்பினார்கள். மதுரை கத்தோலிக்கர் சங்கம் அவர்களுக்கு ஓர் வரவேற்பு அளித்தது. ஆஸ்திரேலியாவில் கத்தோலிக்கர் தலைமையில் கம்யூனிஸத்திற்கு எதிர்ப்பு எவ்வளவு வெற்றிகரமாக நடக்கின்றதென்று திரு. ரெத்தினசாமி எடுத்துக் கூறினார்கள்.

**மதுரையில் கண்டனக் கூட்டம் :** வட இந்தியாவில் சில பிரதேசங்களில் கிறீஸ்தவர்களுக்கு விரோதமாக நடைபெறும் கலவரங்களையும், வெளிநாடுகளிலிருந்து மதபோதகர் வருவதைப்பற்றிய சர்க்கார் கொள்கையையும் கண்டனம் செய்ய கத்தோலிக்கருடைய பொதுக்கூட்டம் அர்ச். வியாகுலமாதாக் கோவில் சதுக்கத்தில் நடைபெற்றது. கூட்டத்திற்கு திரு. ரெத்தினசாமி தலைமை வகித்தார். திரு. டி. டி. சுந்தரம், பி. சபரி, மரியரெத்தினம், இருதயசாமி, பேசினார்கள்.

**சங். ஜெரோம் டிசூசா சுவாமியவர்கள் :** இந்திய அரசியல் நிர்ணய சபையில் அங்கத்தினராகப் பணியாற்றிய சங். ஜெரோம் டிசூசா சுவாமியவர்கள், அமெரிக்காவில் நடக்கப்போகும் ஐக்கிய நாடுகள் சங்கத்திற்கு இந்திய பிரதிநிதிக் குழுவினரில் ஒருவராக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். இதற்கு முன் இருமுறை இச்சங்கத்தின் கூட்டங்களுக்கு இந்திய பிரதிநிதியாகச் சென்றிருக்கிறார்.

**கோயமுத்தூர் நகரசபையில் குருவானவர் படம் :** கோவையில் 46 ஆண்டுகளாக உழைத்த காலஞ்சென்ற மிக. சங். நோயல் ராண்டி சுவாமிகளின் படம் நகரசபையில் திறந்து வைக்கப்பட்டிருக்கிறது. இவர் பிரான்சு தேசத்திலிருந்து 1873-ம் ஆண்டு கோவைக்கு வந்து பல ஆண்டுகள் நகரசபை உறுப்பினராகவும், உபதலைவராகவும், யாவருக்கும் பணியாற்றி வந்தார். 1919-ம் ஆண்டு மரித்தார். நகரசபைக்கு தொண்டு செய்த இவருடைய உருவப்படம் நகராட்சி மன்றத்தில் வைக்கப்பட்டது மிகப் பொருத்தமானதே.

**தக்கலை கத்தோலிக்க வாலிபர் சங்கம் :** தக்கலையில் கத்தோலிக்க வாலிபர் தங்கள் சங்கத்தினால் மகத்தான சேவைகள் செய்து வருகின்றனர். திருமறை அறிவு வளர்ச்சி, சமூக சேவை, மனந்திரும்புதலுக்கு உதவி புரிதல், தங்களிடமும் பிறரிடமும் கிறீஸ்துவின் அரசாட்சியை ஸ்தாபிப்பது இவர்களுடைய குறிக்கோள். 'சேசுவின் திரு இருதயப்பக்தியைப் பரப்ப 84 குடும்பங்களில் திருஇருதய அரசாட்சியை ஸ்தாபிக்க இவர்கள் எடுத்த முயற்சி விசேஷமாகக் குறிப்பிடத்தக்கது.




**நன்றியறிந்த ஸ்தோத்திரங்களைப் பிரசுரிப்பதற்கு குறிப்பிட்ட கட்டணம் இல்லை.**

**நேயர்கள் அனுப்பும் நன்கொடையை பெற்றுக்கொண்டு விஷயத்தை சுருக்கமாக பிரசுரிப்போம்.**

**Kamtha :**—என் அவசரமான காரியம் ஜெயமாகவும், என் வியாதிகளால் எனக்கு யாதொரு தீங்கும் நேராமல் இருக்கவும் சேசுவின் திரு இருதயத்தை மன்றாடுகிறேன். **கோட்டுச் சேரிக்கு பக்கத்து கிராமம் :**—என் மகன் 2 வயது பிள்ளைக்கு பால் கட்டியினால் எவ்வித சிகிச்சைக்கும் குணப்படாமல் திரு இருதயத் தூதனில் பிரசுரம் செய்வதாக நேர்ந்து கொண்ட பின் பின்புறமாக சட்டி புறப்பட்டு ஆப்ரேஷன் செய்து குணம். சர்வேசுரனுக்கு நன்றி. இன்னும் நீடிய ஆயுளை தந்து காப்பாற்ற கிருபை செய்வாராக. **மாயவரம் :**—என் ஏக மகள் பிச்சையம்மாளுக்கு இருமலும் உடம்பு மெலிந்தும் கஷ்டப்படுகிறது. திரு இருதய தூதனில் பிரசுரம் செய்கிறேன். முழு சுகம் தந்து நீடிய ஆயுளுடன் ஆசீர்வதித்து காப்பாற்ற சேசு ராஜாவை மன்றாடுகிறோம். **Semmiyamangalam :**—என் மனைவி முதன் முதலாக ஒரு ஆண் குழந்தையை பெற்றதற்கும், எங்களை பொல்லாப்பினின்று காப்பாற்றினதற்கும், என் கோரிக்கையும் நிறைவேறினதற்கும் என் மனமார்ந்த நன்றி. இன்னும் நான் நினைத்திருக்கும் காரியம் அனுகூலமாகும்படியாகவும் என் கொடிய வியாதியினின்று காப்பாற்றவும் மன்றாடுகிறேன். **வழுத்தலம்பட்டு :**—நான் எண்ணிய காரியம் ஜெயமடைந்ததற்கு நன்றி. இன்னும் நான் எதிர்பார்க்கும் காரியங்கள் ஜெயம் அடையவும் அர்ச். பெரியநாயகி வரம் அளிப்பாள் என்று நம்புகிறேன். **புதுவை :**—என் மகனுக்கு ஒரு வருஷமாய் இரண்டு கண்கள் தெரியாமலிருந்து இப்போது சுகம். சேசுவின் திரு இருதயத்திற்கும் லூர்து ஆண்டவளுக்கும் என் மனமார்ந்த நன்றி. இன்னும் மற்ற மன்றாட்டுகளும் அடைவேன் என்று பூர்ணமாய் நம்பி இருக்கிறேன். **Madras :**—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் அர்ச். ஆரோக்கியமாதா மற்றும் சகல அர்ச்சியசிஷ்டவர்கள் மன்றாட்டாலும் என் தம்பி ஒருவித பொல்லாப்பின்றி வீடு வந்து சேர்ந்ததற்கு சேசுவின் திரு இருதயத்திற்கு நன்றி. என் கணவர் அனுப்பிய பொருள்கள் ஒருவித சேதமின்றி யாவும் சீக்கிரத்தில் வந்து சேரும்படி சேசுவின் திரு இருதயம் கருணை புரிவாராக. **கீழக்கரை :**—எனக்கு இருந்த இருதய நோய் நவநாள் வைத்து வேண்டிக்கொண்டதின் பேரில் சுகம் அடைந்தேன். நன்றி. **மிக்கேல்பட்டி :**—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் அர்ச். சந்தனம்மாள் மன்றாட்டாலும், எனக்கும் என் மனைவி மக்களுக்கும் ஏற்பட்ட கஷ்டங்கள் நீங்கி நற்சுகம் பெற்றோம். எனது மகள் கலியாணம் சேசுவின் இரக்கத்தால் அனுகூலமாய் முடிந்தது. நன்றி. எனக்கு இப்போதிருக்கும் இருமல் நீங்க சேசுவின் திரு இருதயத்தை மன்றாடுகிறேன். **கொழும்பு :**—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் பரிசுத்த சகாயமாதா, அர்ச். பத்தாம் பத்திநாதர் மன்றாட்டினாலும் என் மனைவி ஓர் ஆண் குழந்தையை எவ்வித பொல்லாப்பின்றி பிரசவித்தாள். மேலும் நாங்கள் கேட்கும் காரியங்கள் அனுகூலமடைய பிரார்த்திக்

கிறோம். **மாதாபுரம், Palayamkottai** :—சேசுவின் இரக்கத்தாலும் சகல அர்ச்சியசிஷ்டவர்களின் வரத்தாலும் என் மகனுக்கு நெஞ்சில் உண்டான கட்டி நல்ல சுகமானதற்காக நன்றி. **Cuddalore N. T.** :—சேசுவின் திரு இருதய கிருபையாலும் அர்ச். வேளாங்கன்னி மாதா கிருபையாலும் எனக்கும் என் மகளுக்கும் வந்த வியாதிகள் பூரண குணமானதற்கு நன்றி. என் பிள்ளைகள் சௌக்கியமாக நன்றாய் படிக்கும்படியாக, வெளிஊரிலிருக்கும் என் புருஷனுக்கு சௌக்கியமும் உள்ளூரில் உத்யோகமும் கிடைத்து, என் குடும்பம் ஒன்று சேரவும், என் தொண்டையில் இருக்கும் வியாதி பூரண சுகமடையவும், மற்றும் கருத்துக்கள் நிறைவேறவும் கெஞ்சி மன்றாடுகிறேன். **வேம்பார்** :—எனது மகன் 5 வயதில் விஷ காய்ச்சலில் கஷ்டப்பட்டு அர்ச். குழந்தை தெரேசம்மாளின் மன்றாட்டால் சுகமானதற்கும் திரும்பவும் டைய்பாய்ட் ஜுரத்தில் மிகவும் கஷ்டப்பட்டு சகல அர்ச்சியசிஷ்டவர்களின் வேண்டுதலால் சுகமானதற்கு நன்றி. எனது மகள் டைப்பாய்ட் காய்ச்சலில் ரொம்பவும் கஷ்டப்பட்டு அர்ச். சவேரியாரின் மன்றாட்டால் சுகமானதற்கும், மற்றும் எங்கள் குடும்பத்தில் நேர்ந்த பலவித கஷ்டங்களிலிருந்து எங்களை ஆசீர்வதித்ததற்கும் நன்றி. **Pondicherry** :—கருணைபர சேசுவே ஆத்துமங்களை நேசிக்கிறவரே, தேவரீருடைய திவ்ய இருதய இரக்க உதவியால் எனக்கு மூக்கினுள் இருந்த வியாதி குணமடைந்தது. மகிமை, புகழ்ச்சி, நன்றி, இவை யாவும் உமக்கே. **Royapuram, Madras** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தினால் நான் கடந்த மாதம் நல்ல சுகத்துடன் வேலைக்கு போய் வந்ததுடன் என் மனைவிக்கு நான்கு மாதமாக இருந்த சுரமும் பூரண சுகம் கிடைத்ததற்கும் எங்கள் தாழ்மையான நன்றி. **திருச்சி** :—எனக்கு சேசுவின் திவ்விய இருதயம் செய்து வரும் உபகாரங்களுக்கு நன்றி. என் இரண்டாவது மகன் Simlaவில் கண் வியாதியில் இருப்பது சுகமடைந்தும், எங்கள் குடும்பத்தில் சமாதானமும் ஒத்துழைப்பும் பெருகி நாங்கள் ஒவ்வொருவரும் ஆத்தும சரீர சௌக்கியத்துடன் கடவுளுக்கு தோத்திரம் புரிய சேசுவின் திவ்விய இருதயம் அருள்புரிவாராக. **Hubli** :—எனக்கு இடது கன்னத்தில் வந்த கட்டி வைத்தியர் மருந்துகளால் சுகப்படாமல் தேவமாதா திருக்குடும்பத்தை வேண்டி முற்றும் சுகம் அடைந்ததற்கும் நான் கேட்ட வரத்தை தந்ததற்கும் நன்றி. இன்னும் என்னுடைய சகோதரனுக்கு கூடிய சீக்கிரம் போன வேலை திரும்பி கிடைக்கவும் நான் இப்போது கோரும் சகாயம் அடைய வேண்டி மன்றாடுகிறேன். **வேலூர்** :—சேசுவின் திரு இருதயம் எங்களுக்குச் செய்து வரும் எண்ணிக்கையற்ற உபகாரங்களுக்காகவும் நான் நினைத்திருந்த காரியங்கள் எல்லாம் அனுகூலமானதற்காகவும் நன்றி. இம்மாதம் நாங்கள் எதிர்பார்க்கும் பண உதவிகள் கையில் கிடைக்கவும், என் சகோதரி கஷ்டப்படும் பயங்கரமான வியாதியிலிருந்து பூரண சுகமடைய பயங்கரமான கடன் கஷ்டத்திலிருந்து எங்களை காப்பாற்றவும் என் வேலையில் யாதொரு இடைஞ்சலுமில்லாமல் செய்ய மன்றாடுகிறேன். **கோலாலம்பூர்** :—எனக்கு வந்த வியாதி 5 வருடமாய் பல டாக்டர்களால் கைவிடப்பட்ட பின் தூதனில் பிரசுரம் செய்கிறேன் என்று வேண்டிக் கொண்டதின் பேரில், சேசுவின் திரு இருதய இரக்கத்தினாலும் சகல அர்ச்சிஷ்டவர்களின் மன்றாட்டாலும் ககம் பெற்றேன். இன்னும் என் திரேகத்திலுண்டான, அமுக்கும் என்னை பிடித்த வியாதியும் என்னைவிட்டு சுத்தமாய் நீங்கி நான் நினைத்த காரியம் கைகூடும்படியும் திரு இருதய ஆண்டவருக்கு என் முழு மனதுடனே நன்றி செலுத்தி மன்றாடுகிறேன். **சருகனி** :—என் பேரன் புஷ்பராஜுக்கு வந்த வியாதி பெரிய டாக்டர்களால் கைவிடப்பட்டபோதிலும் சேசுவின் திரு

இருதய இரக்கத்தாலும் அர்ச். ஆரோக்கியமாதா சகாயத்தாலும் பூரண குணமானது. என் மனப்பூர்வமான நன்றி. **Tuticorin** :—எங்கள் குடும்பங்களுக்கு செய்துள்ள உபகாரங்களுக்காக சேசுவின் திரு இருதயத்திற்கும் சகாயமாதாவுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றி. **Pondicherry** :—என் இளைய மகனுக்கும் இளைய மகளுக்கும் வந்த காய்ச்சல் சௌக்கியமானது. சேசுவின் திரு இருதயத்திற்கும் அர்ச். லூர்துதாய், அர்ச். அந்தோனியாருக்கும் மட்டில்லாத தோத்திரம். அவர்களுக்கும் இன்னும் என் குடும்பத்தாருக்கும் நல்ல சுகம் தரும்படி சேசுவின் திரு இருதயத்தை கெஞ்சி மன்றாடுகிறேன். **தோட்டியம்** :—சேசுவின் இருதயம் அர்ச். ஜெயராக்கினி மாதா, அர்ச். சூசையப்பர் கிருபையால் நாங்கள் இதுவரை அடைந்த உபகாரங்களுக்கு நன்றி. இன்னும் எங்கள் குடும்பம் முன்னேற்றமடைய நாங்கள் நினைத்த காரியங்கள் அனுகூலமாகவும், நாங்கள் சுகத்திலும் வேலையிலும் படிப்பிலும் க்ஷேமமாய் இருக்க கெஞ்சி மன்றாடுகிறோம். **பிள்ளைக்களத்தூர்** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் வேளாங்கண்ணி மாதாவின் மன்றாட்டாலும் எனது குழந்தைக்கு இருந்த கண் பொங்குதல் நின்றதற்கும் நான் எதிர்பார்த்த உத்தியோக உயர்வு (**Subedar**) அடைந்ததற்கும் நன்றி. இன்னும் எனது மூத்த அண்ணன்மார் இருவரும் சகோதர பாசத்தோடு நடந்துகொள்ள ஆண்டவர் அருள் புரியும்படி மன்றாடுகிறேன். **வேம்பார்** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் சகல அர்ச்சிஷ்டவர்களின் வேண்டுதலாலும், எங்கள் வேண்டுகோளின்படி எங்களுக்கு அளித்த ஆண் பெண் இருவரையும் சேசுவின் திரு இருதயம் ஆசீர்வதித்து தேவ சந்நிதிக்கு உகந்தவர்களாய் நடந்துவர கிருபை புரிவாராக. என் மகனுக்கு இருதய குளப்பம் ஏற்பட்டிருப்பதை நிவர்த்தி பண்ணி மன அமைதியோடு தொழில் முறைகளை கவனித்துவர சேசுவின் திரு இருதயம் அருள்புரிவாராக. எங்கள் குடும்பத்தையும் எங்கள் தொழில் முறைகளையும் விசேஷ விதமாய் ஆசீர்வதித்து காப்பாற்றுவாராக. **வேம்பார்** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் சகல அர்ச்சியசிஷ்டவர்களுடைய மன்றாட்டாலும் எங்களுக்கு நல்ல வேலை கிடைத்தோடு மகனுக்கு வந்த நோய் தீர்ந்ததற்காகவும் எங்கள் மனமார்ந்த நன்றி. இன்னும் எங்களுக்கு வேண்டிய காரியங்கள் அனுகூலமாகும்படி திரு இருதய ராஜா உதவி செய்வாராக. **உதகமண்டலம்** :—எனது பேரக் குழந்தைகள் ஆலீஸ், சௌந்தரராஜ் இவர்களுக்கு வந்த தீராத வியாதி சேசுவின் திரு இருதய ஆசீரால் குணமடைந்தது. சேசுவின் திரு இருதயத்திற்கும் ஜெபமாலை மாதாவுக்கும் நன்றி. **குத்தி** :—என் குமாரன் சாவியருக்கு கண்டுள்ள புத்தி மாராட்டம் சௌக்கியமாக, சகல அர்ச்சிய சிஷ்டவர்களின் மூலியமாய் சேசுவின் திரு இருதயத்தை மன்றாடுகிறேன். **வடுகர்பேட்டை** :—கடின சுகயீனத்திலிருந்து என்னை காப்பாற்றி பூரண சௌக்கியம் கொடுத்த சேசுவின் திரு இருதயத்திற்கு நன்றி. **எஸ். ஆர். பட்டணம்** :—குழந்தையை பிரசவ வேதனையில்லாமல் காப்பாற்றினதற்கும் நினைத்த காரியம் அனுகூலமானதற்கும் சேசுவின் திரு இருதயத்திற்கு நன்றி. **Kamtha** :—நான் நினைத்த சில காரியங்கள் அனுகூலமானதற்கு சேசுராஜாவுக்கும் ஆரோக்கியமாதாவுக்கும் நன்றி. இன்னும் நான் நினைக்கும் சில காரியங்கள் அனுகூலமாக மன்றாடுகிறேன். **நரசிம்ம ராஜ மொஹல்லா, மைசூர்** :...என் குடும்பத்தில் நேர்ந்த பலவித துன்பங்கள் திருக்குடும்பத்தின் தயவாலும் அவசரத்திலிருப்பவர்களின் பரிபாலினியாகிய அர்ச். ரீத்தம்மாள் மற்றும் அர்ச்சியசிஷ்டவர்களின் உதவியாலும் நீங்கினதற்கு என் நன்றியை செலுத்தி குடும்பத்தில் பூரண சமாதானம் உண்டாகும்படி நம்பிக்கையுடன் பிரார்த்திக்கிறேன். **Coromandel**

**K. G. F.** :—சேசுவின் திரு இருதய கிருபையாலும் பாத்திமா அன்னையின் சலுகையாலும் மற்றும் அர்ச்சியசிஷ்டவர்களின் மன்ருட்டாலும் எனது மக்களின் சுகத்திற்காகவும் அவர்கள் பரீட்சையில் தேறுவதற்காகவும் மன்ருடினதின் பலனுல், எனக்கு அனுகூலம் தந்ததற்காக என் மனமார்ந்த நன்றி. **இராயபுரம்** :—சேசுவின் திரு இருதய இரக்கத்தாலும் வேளாங்கன்னி அர்ச். ஆரோக்கியமாதா சகல அர்ச்சியசிஷ்டவர்கள் விசேஷ மன்ருட்டாலும் எனக்கு வந்திருந்த பிளாடரில் கட்டி ஆப்ரேஷன் செய்து சுகமடைந்ததற்காகவும் என் மகனுக்கு வேலை கிடைத்ததற்காகவும் இன்னும் அநேக கஷ்டங்கள் நிவர்த்தியானதற்கும் நன்றி. இப்பொழுது நாங்கள் கோரும் காரியங்கள் நிறைவேறும்படியாகவும் என் சிறிய மகன் வருகிற அக்டோபர் மாதத்தில் எழுதப்போகும் S.S.L.C. பரீட்சையில் தேறும்படியாகவும் மன்ருடுகிரேும். **குரும்பகரம்** :—இருதய ராஜாவாலும் லூர்துமாதா மற்றும் அர்ச்சியசிஷ்டவர்கள் உதவியாலும் எனக்கு வியாதி நீங்கி என் பிள்ளைகளுக்கு ஆபத்து இல்லாமல் காப்பாற்றியதற்காக நன்றி. இன்னும் மற்ற காரியங்களும் அனுகூலமாக கெஞ்சி மன்ருடுகிறேன். **திண்டுக்கல்** :—சேசுவின் திரு இருதய இரக்கத்திஞலும், அர்ச். சகாயமாதா, அர்ச். சூசையப்பர் இவர்கள் மன்ருட்டிஞலும், என் மகன் சேவியருக்கு இருந்த ஆபத்தான நிலைமை மாறினது. அவனுக்கு பூரண சௌக்கியம் கிடைக்கும்படியாகவும், என் உத்தியோகத்தில் இருக்கப்பட்ட இடைஞ்சல்கள் யாவும் நீங்கி எனக்கு உத்தியோக உயர்வு கிடைக்கும்படியாகவும் திரு இருதய ராஜா கிருபை செய்வாராக.

## "மாதா தைலம்"
(T. M. Regd.)



**உலகம் போற்றும் ஜே. கே. அற்புத மருந்துகள்**

*(மலாய் மூலிகைகளால் தயாரிக்கப்பட்டவை.)*

1. **ஜே. கே. மாதா தைலம்** (Regd) (வாத நோய் சஞ்சீவி). எல்லாவித வலிகள், வாத நோய்கள், கைகால் பிடிப்பு, குத்தல், குடைச்சல், இளம்பிள்ளை வாதம், பாரிஸ வாயு, இழுப்பு, மார்வலி, புரவாத ஜன்னி, வீக்கம் இன்னும் தேள், பாம்புபோன்ற விஷ கடிகளுக்கும் வலி கண்ட பாகத்தின்மேல் தேய்த்த 48 மணி நேரத்தில் ஆச்சரியமான குணம் தரும். 2 அவுன்ஸ் புட்டி 1-க்கு 1-4-0 மூன்று புட்டிக்கு ரூ. 3—4—0. (தபால் பாக்கிங் சார்ஜ் தனி)

2. **ஜே. கே. ரூமோலாக்ஸ் பில்ஸ்** மேலே குறிப்பிட்ட வியாதிகள் கடுமையாகவும் நாள்பட்டதாகவும் இருந்தால் இந்த அதிசய மாத்திரையை உள்சாப்பிட்டும் 'மாதா தைலம்' மேலுக்கு பூசியும் வந்தால் பூரண சுகம் உண்டாகும். 10 நாளைக்கு வேண்டிய 20 மாத்திரை கொண்ட புட்டி ரூ. 1—8—0.

3. **ஜே. கே. ஸ்பெசிபிக்** (சர்மநோய் சஞ்சீவி). குஷ்டம், மேகபடை, எக்சிமா தேமல், கரப்பான், கக்கூஸ் பத்து, தோல் தடிப்பு, இடுப்பு படை, சொறி சிரங்கு, சேத்துப்புண் போன்ற கடுமையான படைகளை இரண்டே நாளில் காய்ந்து கருகச்செய்யும். ஒரு வாரத்தில் ஆச்சரியப்படத்தக்க பூரண குணம். உத்தரவாதம். உள் சாப்பிட மாத்திரையும் மேலுக்கு உபயோகிக்கும் 2 வித களிம்பும் சேர்ந்த 15 நாள் மருந்து செட் ஒன்றுக்கு ரூ. 5—8—0.

(தபால் பாக்கிங் சிலவு தனி)

4. **ஜே. கே. ஹோலிமிக்ஸ்** (பரிசுத்த சர்வரோக நிவாரணி) குறைந்தது 200 வியாதிகளை கண்டிக்கக்கூடிய சக்தியுள்ள மருந்து. குழந்தைகள் உள்ள ஒவ்வொரு குடும்பத்திலும் இருக்கவேண்டிய அவசிய மருந்து. எல்லா ஜுரங்கள், தலைவலி, ஜலதோஷம், ஜன்னி, வாத நோய்கள், நரம்பு வலிகள், அஜீரணம், காலரா, மயக்கம் முதலிய அநேக வியாதிகளை குணமாக்கும். மேலுக்கும் உள்ளுக்கும் உபயோகிக்கக்கூடிய சொட்டு மருந்து புட்டி 1-க்கு 1-4-0 மூன்று புட்டிக்கு ரூ. 3-4-0. (தபால், பாக்கிங் சிலவு தனி)

குறிப்பு:—(1) இந்தியா—சிலோன். 1 புட்டி மாதா தைலம் போஸ்டேஜ் உள்பட ரூ. 2—12—0 மூன்று புட்டிக்கு ரூ. 5—4—0 அனுப்பிவைக்கவும்.

(2) மற்ற வெளி நாடுகள்:—போஸ்டேஜ் உள்பட 1 புட்டிக்கு 7 ஷில்லிங் 3 புட்டிக்கு 11 ஷில்லிங். முன் பணமாக போஸ்டல் ஆர்டர் அனுப்பவும்.

**(எல்லா வியாதிக்கும் மருந்து அனுப்பப்படும், பதில் வேண்டுவோர் தபால் கட்டணத்துடன் எழுதவும்)**

விபரத்திற்கு :— **DR. ஜே. கே. ஆஸ்பிட்டல்**

**புது பாளையம், கடலூர். N. T. (S. I.)**

ஒக்டோபர்

## ஜெபமாலை அன்னையின் மாதம்

**இம்மாதத்தில் அத்தாயின் நேச மக்களாகிய நாம் என்றும் வாடா மலர்மாலையாகிய ஜெபமாலையை அடிக்கடி அத்தாய்க்குச்சூடி அவளை மகிமைப் படுத்துவோம்.**

பாலஸ்தீன் நகரிலிருந்து வரவழைக்கப்பட்ட சிப்பி ஜெபமாலைகள் :—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உருண்டை மணி | நெ. | 128 | 132 | 134 | |
| | விலை. | 5—4—0 | 8—0—0 | 9/= | |
| முட்டை வடிவம். முதல்தரம் | நெ. | 400 | 402 | 404 | 406 | 408 |
| | விலை. | 5-4-0 | 6-4-0 | 7-8-0 | 9-8-0 | 10-8-0 |
| ஷை இரண்டாவது தரம் | நெ. | 300 | 302 | 304 | 306 | 309 |
| | விலை. | 3-8-0 | 4-8-0 | 5-8-0 | 6-8-0 | 8-4-0 |

பரிசுத்த ஸ்தலத்திலிருந்து வரவழைக்கப்பெற்ற ஜெபமாலைகள். ஒலிவ் மரக் கொட்டை. ஜெர்மன் சில்வர் கம்பியில் இணைக்கப்பட்டது,

நெ. 712 ரூ. 1—4—0 நெ. 721 ரூ. 0—14—0

புதுநன்மை வாங்கும் சிறுவர் சிறுமிகளுக்கு பரிசாக வழங்குவதற்கேற்ற பல வர்ணமுள்ள பிரான்சு தேச ஜெபமாலைகள்.

கருப்பு, வெள்ளை } நெ. 7881 7916
நீலம், ரோஸ் } விலை. 0-7-0 0-8-0

புதுநன்மை வாங்கும் சிறுவர் சிறுமிகளுக்கு ஞாபகார்த்தமாக வழங்குவதற்கேற்ற அரிய சாமான்களடங்கிய மரப்பெட்டி.

**சாமான்களின் விபரம்:** செலுலாயிட் கவர் பைண்ட் பண்ணின அருமையான (தமிழ் அல்லது இங்கிலீஷ்) ஜெபப் புஸ்தகம் ஒன்று. சுத்தமான வெள்ளி ஜெபமாலை ஒன்று. கழுத்தில் அணிவதற்கான சுத்த வெள்ளிச் சங்கிலி ஒன்று. பிரேமி இணைத்தது செட் ரூ. 15/=

செலுலாயிட் கவர் பைண்ட் பண்ணின அழகிய (தமிழ் அல்லது இங்கிலீஷ்) ஜெப புத்தகமொன்று, கல்மணி ஜெபமாலை ஒன்று, கழுத்தில் அணியக்கூடிய கில்ற் சங்கிலி ஒன்று. அழகிய அட்டைப் பெட்டியில் போட்டுள்ளது. செட் விலை ரூ. 5/=.

சாதா பைண்டிங் ஜெப புத்தகமொன்று. கல்மணி ஜெபமாலை ஒன்று. கில்ற் சங்கிலி ஒன்று. அட்டைப் பெட்டியுடன் செட் ரூ. 2—8—0.

திரு இருதய அரசாட்சியைக் குடும்பங்களில் ஸ்தாபகம் செய்வதற்கான அழகிய ஜெர்மன் அல்லது சுவிஸ் திரு இருதயப் படங்கள் :

| | | | | |
|---|---|---|---|---|
| சைஸ் | 10″ × 8″ | 17′ × 13″ | 20″ × 16″ | 29′ × 22″ |
| விலை. | 0-8-0 | 1-8-0 | 2-8-0 | 5-0-0 |

புதிய அர்ச்சியசிஷ்டவரான பத்தாம் பத்திநாதரின் அழகிய இத்தாலியன் பிரின்ட் படங்களும், மற்றும் பல படங்களும் கிடைக்கும்.

ஜெபப் புஸ்தகத்தின் அளவு படம் டஜன் ரூ. 1-4-0 100 ரூ. 9-0-0
போஸ்ட்கார்டு சைஸ். ஒன்று ரூ. 0-3-0 டசன் ரூ. 2-0-0 100 ரூ. 15-0-0
வியாபாரிகளுக்குத் தகுந்த கமிஷன் கொடுக்கப்படும்.

**தோமாஸ் ரொட்ரீகோ அன்சன்ஸ் இந்தியா லிமிடெட்**
**165 பிராட்வே மதரூஸ்**

## 25-வது வருட மரண ஞாபகம்



நித்திய சமாதானத்தில் இளைப்பாறுவதாக !

**( Gabriel Gomez ) கபிரியேல் கோமெஸ்**

**மரணம்: 15—10—1930**

எங்கள் மத்தியில் தீபம்போல் பிரகாசித்து எங்களால் எக்காலத்துக்கும் மறக்க இயலாத விதமாய் என்னையும் என் பிள்ளைகளையும் நேசித்து, எங்களுக்கு ஒரு குறைவுமில்லாமல் அன்புடன் கண்காணித்து, பாதுகாத்துவந்த என் நேச பத்தாவும் எங்கள் அருமைத் தந்தையுமாகிய கபிரியேல் கோமெஸ்அவர்கள் எங்களைவிட்டு மறைந்து தன் இரட்சகரின் பாதம் சேர்ந்த 25-ம் வருஷம் நாளது அக்டோபர் மாதம் 15-ம் தேதி பூர்த்தியாகிறது. இதைக் கண்ணுறும் சங்கைக்குரிய குருக்கள், கன்னியர்கள், பந்துக்கள், நண்பர்களே இவ்வாத்துமத்தை தயவாய் நினைவு கூர்ந்து தங்கள் செபங்களிலும் திவ்விய பூசையிலும் பிரார்த்தித்துக் கொள்ளுமாறு மிகத் தயவாய் கேட்டுக்கொள்ளுகிறோம்.

மனைவி—குருஸ் பிள்ளையம்மாள் கோமெஸ்

மக்கள்:

லூவீசா கோமெஸ், பிலோமினம்மாள் கோமெஸ் (Mrs. R. Devotta)

காலஞ் சென்ற சிஸ்டர் மார்கரெட் தெரஸ்

ரோக் கோமெஸ் (மகன்) ஜோசப்பீன் கோமெஸ் (Mrs. Peter Gomez)

சிஸ்டர் மார்கரெட் பெர்க்மான்ஸ்

Yatiantota (Ceylon) மருமக்களும், பேரன் பேத்திமார்களும்

Printed at the De Nobili Press, K. Pudur, Madurai.
Edited by Rev. Fr. J. Diaz s.j. and Published by Rev. Fr. M. D. John s.j.,
St. Mary's P. B. 56, Madurai.

Regd. No. M. 1533

